# உள்ளே... உள்ளே... உள்ளே...

## சிறுகதை



## கட்டுரை



## கவிதை



## மேலும்...








# காணிநிலம்

தனி இதழ்: ₹25

சொல் விளையும் பூமி

• ஜூலை – செப்டம்பர் 2018 • இதழ் : 3 • தனிச்சுற்றுக்கு மட்டும்


## ஆசிரியர் குழு

- சுப்ரா
- இரா. நாறும்பூநாதன்
- எம்.எம். தீன்
- சண்முகம்
- இரா. செல்வமணி
- ப. தாணப்பன்
- சங்கரராமன்
- ரமணி முருகேஷ்
- சக்தி வேலாயுதம்
- செ.ச. பிரபு

## தொடர்புக்கு:


ஆசிரியர் குழு

காணிநிலம் இலக்கிய இதழ்,

29, ‘தமிழ் அகம்’ வி.ஐ.பி. நகர்,

தியாகராஜ நகர்,

திருநெல்வேலி – 11,

அ.எண் – 627 011.

அலைபேசி எண்

94423 28085, 94421 12763

kaaninilam2018@gmail.com

 காணிநிலம்




அட்டை ஓவியம்: சண்முகம்

பெருமையும், உரிமையும் படைப்பாளிக்கே...

| சந்தா விபரம் | | |
|---|---|---|
| | ஆண்டுச் சந்தா | ₹100/- |
| | ஈராண்டுச் சந்தா | ₹200/- |
| | ஐந்தாண்டிற்கு | ₹500/- |
| | ஆயுள் சந்தா | ₹1000/- |

வங்கி மூலம் பணம் செலுத்த:

A/C Name. Thanappan P.

A/C No. 119010100045727

IFSC CODE ANDB0001190

ANDHRABANK. TIRUNELVELI.

எம்.எம்.தீன்



# உதிப்பு

கடலிலிருந்து அலையலையாய் வரும் பனிக்காற்று, அவள் முகத்தைச் சீண்டிவிட்டு பகவதியம்மன் கோவில் சுவற்றில் மோதி மேலேறி எங்கோ போய்க் கொண்டிருந்தது.

உறைந்திருந்த காலைப் பனியை பெயர்த்துக் கொண்டு வருவதைப்போல கீழ்திசை கூதல் காற்று தொடர்ந்து வந்தபடியே இருக்கிறது. அதிகாலையின் குளிர் அவளை சில்லிடச்செய்தது. அமிர்தா அவனை ஏறிட்டு சிறியதாய் புன்னகைத்தாள். அந்தப் புன்னகையில் அவள் முகம் குளிரால் ஒடுங்கி இருப்பதை உணர்ந்தான் தணா. அவளது இடது கைவிரல்களை தன் விரல்களோடு இறுக்கிக் கொண்டான். அந்த இறுக்கத்தில் அமிர்தாவின் முகம் கொஞ்சம் சிவந்தது. அவள் தன் தாவணியை எடுத்துப் போர்த்தியபடி வயிற்றை மறைத்துக் கொண்டாள்.

அதிகாலை 5 மணிக்கே விடுதிப்பையன் கதவை லேசாகத் தட்டி, "சார், எந்திரிங்க. சீக்கிரத்துல சூரியன் வந்துடும் சார். சன்ரைஸ் பாக்க சீக்கிரமா போங்க" என்றான்.

அவன் அமிர்தாவை எழுப்பி கைபிடித்து தூக்கிவிட்டு முகம் அலம்பச் செய்து அழைத்துக் கொண்டு வந்தான். குளிர்ந்த நீரில் முகம் கழுவியது அமிர்தாவை நடுங்க வைத்தது. அவளை மார்போடு அணைத்து நெற்றியில் முத்தமிட்டான். "அமி, கொஞ்சம் கஷ்டந்தான். இப்ப போனாத்தான் சன்ரைஸ் பார்க்க முடியும்"

அப்படியே அவளை மெதுவாக வெளியே அழைத்து வந்தான். சேட்டன் கடை பாய்லரில் ஆவி பறந்தபடி இருந்தது. அமிர்தாவை அடுப்பின் அருகில் நிற்க வைத்தான். சேட்டன் அவர்களைப் பார்த்து, "இவிட மதி. வெப்பம் கொள்ளாம்." என்று சொல்லியபடியே கடைவாய்ப்பல் ஓட்டை தெரிய சிரித்தார். வெதுவெதுப்பு இருவருக்கும் தேவைப்பட்டது. சூடான தேநீரைக் குடித்துவிட்டு இருவரும் கதிரவன் கடலுக்குள்ளிருந்து எழுவதைக் காணச் சென்றார்கள். கன்னியாகுமரியில் குளித்துவரும் கதிரவனைக் காண மிகவும் ஆவல் கொண்டு அழைத்தவள் அமிர்தாதான்.

கோயிலுக்கு செல்லும் வழி தார்ச்சாலையின் இருபுறமும் கடைகளை திறந்துவிட்டார்கள். அந்த வெளிச்சத்தில் வழியே கீழிறங்கி செல்லும் சாலை வழியாய் அழைத்துக் கொண்டு போனான். நேராகப் போனால் பகவதி அம்மன் மூக்குத்தி மினுக்கத்தைக் காணமுடியும்.

"தணா, சன்ரைஸ் பாத்துட்டு ஒடனே ரூமுக்கு வந்திடுவோம். எனக்கு ரொம்ப குளிருதுப்பா", என்றாள். அவனும் சிரித்தபடியே தலையாட்டினான்.

குமரி அம்மன் கோவில் காம்பவுண்ட் சுவர் அருகே வந்து பார்த்தபோது, ஏற்கனவே சூரிய உதயம் பார்க்க நிறையபேர் நின்று கொண்டிருந்தார்கள். ஒரு வெள்ளாடு தனது குட்டிகளோடு குளிரில் ஒடுங்கி நின்று கொண்டிருந்தது. அவள் அந்தக்குட்டி அருகே போய் தடவிக் கொடுத்தாள். அது எவ்வித சலனமும் இன்றி நின்று கொண்டிருந்தது. தாய் வெள்ளாடு அவளை ஏறிட்டு மூஞ்சியைச் செறுமிக் கொண்டது. இந்தப்பனி நேரத்தில் ஏன் குட்டிகளை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறது..? என்று அமிர்தா தனக்குள் கேட்டுக் கொண்டாள்.

"அமி, என்ன வெள்ளாட்டங்குட்டியெ பாத்தது போதும் வா. சுவத்தோரம் நின்னுக்குவோம். கொஞ்ச நேரமானால் எடங்கிடைக்காது", அவளை அருகழைத்து நிறுத்திக் கொண்டான். அவள் தலையைச் சுற்றிப் போட்டிருந்த சுடிதாரை நீளமா போட்டு வயிற்றை மூடிக் கொண்டாள்.

கதிரவன் உதிப்பதற்கான எந்த அறிகுறியும் கீழ்த்திசையில் இல்லை. விவேகானந்தர் மண்டபமும், திருவள்ளுவர் சிலையும் பனிக்குள் மறைந்து மங்கலாகத் தெரிந்தன. வெள்ளிக்கோடாக அலைகள் கடலின் மேலே ஊர்ந்து வருவதைப்போல வந்தபடி இருந்தது. சிறிது இடைவெளி விட்டு அடுத்த வெள்ளிக்கோடு தொடர்ந்தது. அடுத்தடுத்த அலையின் ஒவ்வொரு வெண்நுரையும் கரையை அடைந்து திரும்புவதை பார்த்தபடி இருந்தாள்.

"அதிகாலைக் கடல் அமைதியா இருக்குல்லா. இன்னும் தூங்கி விழிக்கல போல. இதெ எழுப்பி விடுறதுக்கு எந்த அம்மா இருக்காங்க. அதுதான் தன்னிஷ்டத்துக்கு தூங்குது போலப்பா. நல்லா கொடுத்து வச்சது. எங்கம்மாவுக்கு ஆறு மணிக்கெல்லாம் எந்திரிச்சிரணும் இல்லாட்டி சங்குல ஓங்கி ஒரு மிதிதான் கிடைக்கும். கொஞ்ச நேரம் பிந்தி உதிச்சா இந்த சூரியன் கெட்டா போவும்." என்று சொல்லியபடியே சிரித்தாள் அமிர்தா.

அவனும் பெருக்கு சிரித்துவிட்டு சொன்னான். "அமி, அந்தா கொஞ்சம் இடமிருக்கு திண்டுல அதுல நீ உக்காந்துக்க. இல்லாட்டி உனக்கு காலு வலிக்கும்பா." என்று காட்டினான். கொஞ்சம் தள்ளி கரடுமுரடான அந்தச் சுவரில் பாட்டிக்கு அருகில் உட்கார இடமிருந்தது. அவள் செருப்பை கழட்டி பின்தரையில் போட்டுவிட்டு. ஏறி அமர்ந்தாள்.

ஒருபுறமாய் உடலைச் சாய்த்தபடி அவள் ஏறுவதற்கு உதவி செய்தான். அருகே பாட்டி ஒன்று ரோஸ்வண்ண வெல்வெட் துண்டுக்குள் கைக்குழந்தை ஒன்றை பொதிந்து வைத்திருந்தாள். குழந்தை தன் பெரிய மழலைக் கண்களால் எல்லோரையும் பார்த்தபடி இருந்தது. அதன் வாயில்



ஒழுகிய பாலின் எச்சில் நுரை அலைபோல படர்ந்திருந்தது. கண்களைச் சுருக்கிக் கொண்டு தூங்குவது அழகாய் இருந்தது. அமிர்தாவுக்கு அந்தக் குழந்தையை கேட்டு வாங்கி கையில் ஏந்திக்கொள்ள ஆசையாயிருந்தது.

பாட்டியின் அருகில் இரண்டு பெண்குழந்தைகள் ஒன்றையொன்று நெருக்கியபடி அமர்ந்திருந்தது. அவைகளின் சின்ன சடைகளில் நேற்று சூடிய பூவின் நாரும், சில பூக்களும் இருந்தன. அமிர்தா அந்த கரடுமுரடான அந்த எல்கைச் சுவரின் கற்கள் குத்தியதால் கொஞ்சம் நகண்டு பக்கவாட்டில் நகர்ந்து அமர்ந்தாள். "அமி, கல்லு குத்துதா, கர்சீப்ப கீழே போட்டுகிரியா," தலையில் போட்டிருந்த கைக்குட்டையை எடுத்தான். வேண்டாம் என்று பலமாகத் தலையை ஆட்டிவிட்டு அலை சுவற்றில் மோதுவதைப் பார்த்தபடி இருந்தாள். அலைகள் சுவற்றை அரித்துவிடாமல் இருக்கப் போடப்பட்ட கற்களுக்குள் கடல்நீர் புகுந்து வெளியே வந்து சிதறியது. தரையில் கிடந்த ஈரமணலை இழுத்துக் கொண்டு கரையில் ஒதுங்கிய அலை திரும்பும் போது கற்களின் இடுக்குகள் வழியாக மணலை உள்வாங்கி கொள்வதையும் பார்த்து மலர்ந்தாள். சின்னசின்ன விசயங்களும், அதன் செயல்களும் அவளது அழகியல் மனதை கொள்ளை கொள்ளும் விசயங்களாக மாறிவிடுகின்றன.

"தணா, பாத்தீங்களா கடற்பாசியெ. அங்க பாருங்க அந்தப் பாறைக்குள்ளே தெரியுதா." ஆள்காட்டி விரலை நீட்டிக் காட்டினாள். அதிகாலை வெளிச்சத்தில் கடற்பாசி தெரிய வெளுத்திருந்தது கடல்நீர். இன்னும் வானம் புகைமூட்டமாகவே இருந்தது. சூரியன் தெரிவதற்கான எந்த அறிகுறியும் ஏற்படவில்லை.

வழுக்கு பாசி பிடித்து கற்கள் கறுப்பாக மாறியிருந்தன. அலைபாவும் கருங்கல்லில் இரண்டு மூன்று கரும் நண்டுகள் அலைநீரில் மூழ்கி மூழ்கி குளித்துக் கொண்டிருந்தன. வேகமாகப் பாய்ந்து வரும் அலையில் அசையாது கல்லைப் பற்றிக் கொண்டு நின்றன. சிறுகுழந்தைகள் கடல்அலைகளை காலில் பாவுகையில் பெற்றோரின் கையையோ, துணியையோ பிடித்துக் கொண்டு விழாது நிற்பதைப் போலான பரவசம் நண்டுக்கும்

> **அவளுக்கு பெண் குழந்தைதான் வேண்டும் என்று ஆசைப்பட்டாள். அதுவும் எந்த உறவும் இல்லாத சூழலில் சுகமாகப் பிறக்கணும். வேறொன்றும் தோன்றவில்லை. அம்மா ஆதரவிருந்தால் இந்தக் கவலை வேண்டாமே என்றிருந்தது. ஆனாலும் தணாவின் நேசம் எல்லாவற்றையும் தாண்டி இருப்பதாக உணர்ந்தாள்.**

இருக்குமோ என்று தோன்றியது அமிர்தாவுக்கு. மீண்டும் மீண்டும் வரும் அலைகளின் பாய்ச்சல்களை நண்டுகள் சாதாரணமாக எதிர் கொண்டன.

"வேணி, அந்தா சூரியன் தெரியுது பார்." என்று கையை நீட்டிக் காட்டியது பாட்டி அருகில் இருந்த சிறுமி. பின்னால் ஐஸ் விற்பவன் பஸ்ஸர் ஒலியால் கவரப்பட்ட சிறுமி சட்டென கடலை நோக்கித் திரும்பிப் பார்த்தாள்.

“அய்யா, வேணி ஏமாந்துட்டியா. ஹைய்யா,” என்றாள் பெரியவள்."

“போக்கா... பொய் சொல்லி யக்கா.” என்று சொல்லிவிட்டு “ஆச்சி, ஆச்சி ஐஸ் வாங்கித் தாங்க ஆச்சி’’ என்றது. பாட்டி அவள் பேச்சை காதில் வாங்கிக் கொள்ளாதது போல இருந்தது. மீண்டும் தன் குரலை உயர்த்தி கேட்டாள்.

“வேணி, இப்பவே ரொம்ப குளிரா இருக்கு. ஐஸ்.சாப்புட்டா சளி புடிச்சிடும். சும்மா இரி. போவும் போது ஏதாச்சும் வாங்கித் தாரேன்.” என்றாள் தள்ளி இருந்த அம்மா. சிறுமி அழ.ஆரம்பித்தாள்.

“ஏட்டி., வேணி அழாதே. போவும் போது நாமொ பஞ்சு முட்டாய் வாங்குவோம்.’’ என்றாள். அவள் சமாதானம் ஆகாமல் முணங்கினாள். அவளது முணக்கத்தைக் கேட்ட பாட்டி, “ஏய். சும்மா இருக்கியா அல்லது ஊட்டுக்கு போவமா. சும்மா இருக்கமெ, எங்கு வந்தாலும் கண்டதுகழியது கேட்டு அழுவறது நல்லது கிடையாது. இல்லாட்டி நடக்குறதே வேற.” என்று அதட்டினாள் பாட்டி.

அமிர்தா தணாவை ஏறிட்டுப் பார்த்து ஐஸ்காரனை நோக்கி கையை நீட்டினாள். “தணா, பால் ஐஸ் இருக்கா கேளு.”, என்றாள் கெஞ்சலாக. “அமி, உனக்கென்னா கிறுக்கா புடிச்சிருக்கு. இப்பவே குளிர்ல நடுங்கிட்டு உக்காந்திருக்கே. பால் ஐஸ் வேணுமாம், பால் ஐஸ். சலதோஷம் காய்ச்சல்னு ஏதாச்சும் வந்தா யாரு பாக்குறது. அந்த புள்ளைங்களே கம்முன்னு இருக்கு.”

“ஏய், தணா உனக்கு என்ன மிரட்டுறதுக்குன்னு ஒரு காரணம் கிடைச்சிடுச்சி. அதை வச்சே. பேசுறல்லே”

“அதில்லடி, உனக்கு தலைவலி காய்ச்சல்னா நான்தான் இருந்து பாக்கணும். ஆபீசுல எனக்கு லீவு தரமாட்டான். என்ன பன்றது பயந்தாண்டி”, அவனது இரக்கமான சிரிப்பில் தன் ஆசையை அடக்கிக் கொண்டாள். சிறு பிள்ளையில அவளுக்காக அவளது பாட்டி சொல்லி பால் ஐஸ் வாங்கி கிளாஸ்ல போட்டு மூடி வச்சிருக்கும். மூத்த அண்ணன் எங்கே வித்தாலும் வாங்கிக் கொண்டு ஓடோடி வந்திருவான். ஒரு தடவை பள்ளிக்கூடம் விட்டு வர லேட்டாகி தாமதமாக வந்த போது உருகிப் போன ஐஸ்குச்சியை பாத்துட்டு அழுத போது சின்னண்ணன் உருகிய உருக்கம் மனதுக்குள் வந்து போனது. இப்போது தணாவை காதலித்து திருமணம் செய்து கொண்டதால் அவர்களெல்லாம் ஏறிட்டு பார்க்காமல் இருக்கும் நிலைமையையும் எண்ணிப் பார்த்துக் கொண்டாள். தண்டாயுதபாணி தன்னை நன்றாகப் பார்த்துக் கொள்வது ரொம்ப ஆறுதலாய் இருந்தது. அப்படியே திரும்பி தணாவை ஏறிட்டாள். தணா கடலையே பார்த்துக் கொண்டிருந்தான். நல்லவேளை, தான் சிந்தித்து கொண்டிருப்பதை அவன் பார்க்காதது நல்லதுதான் என்று சொல்லிக் கொண்டாள். தணா எண்ணிக் கொள்ளும் போதெல்லாம் அவள் கண்ணில் நீர் கசிந்து விடுகிறது. அவனுக்குத் தெரியாமல் கண்களைத் துடைத்துக் கொண்டு தாவணியை வயிற்றில் மேல் போட்டுக் கொண்டாள். பிள்ளைகள் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தக் கீச்சுக்குரல்கள் தனக்கானதுபோலத் தெரிந்தது. வயிறு பிசைந்ததுபோல வலி எடுத்தது. கையை வைத்து அழுத்திக் கொண்டு என்னவாக இருக்கும் என்று உற்றுக்கேட்டாள். ஒன்றுமில்லை.

“வேணி, உனக்கு விவேகானந்தர் வீடு தெரியுமா”

“தெரியாது அக்கா. இதுதான் அவுரோட வீடா.”

“ஆமாண்டீ..விவேகானந்தர் சின்ன ஆளு. அதுனால அவுரு ஊட்டுக்குள்ளே இருக்காரு. தியானம்லா பண்ணுவாராம்.”

“அப்போ, திருவள்ளுவர் ஏன் வெளியே நிக்கிறாரு”

“அவரு பெரிய ஆளா. அவருக்குப் போயி சின்ன வீடா கட்டிட்டாங்களா. அதுதான் உள்ள இருக்க முடியாமெ வெளியே வந்து நிக்குறாரு. நல்லா காத்து வாங்கிக்கிட்டு நிக்காரு”

‘‘அது சரி அக்கா அவுருக்கு கால் வலிக்காதா. நின்னுக்கிட்டே இருக்காரு பாவம்லாக்கா”

“இல்லடி, உக்காந்தா அவுரு தூங்கிடுவாரு. பின்னே நமக்கு எப்படி திருக்குறள எழுதித் தருவாரு. சாய்ந்திரம் விவேகானந்தர் ஊட்டுக்கு போட்டுல நாம போவோம். சித்தி சொல்லிச்சி, அதான் உங்கம்மா.”

‘‘அம்மா சாய்ந்திரம் விவேகானந்தர் ஊட்டுக்கு போவோம்ல.” சத்தமாகக் கத்தி கேட்டாள் சிறுமி. அவளது அம்மா பதில் ஏதும் சொல்லவில்லை. அமிர்தாவுக்கு அப்படியே உட்கார்ந்திருப்பது கொஞ்சம் சங்கடமாக இருந்தது. பிள்ளைகளின் பேச்சு அவளை உற்சாகப்படுத்தியது. இன்னும் சூரியன் வந்தபாடில்லை. பாட்டி மடியில் இருந்த குழந்தை எழுந்து நின்றபடி ஏதோ பேசியது. பாட்டி பதிலுக்கு பேசிக் கொண்டிருந்தாள்.”

“அம்முக்குட்டி, செல்லம். பாட்டு பாடு” என்றாள் சிறுமி. கைப்பிள்ளை அவளையே பார்த்துக் கொண்டிருந்தது. அமிர்தாவுக்கு அந்த பிள்ளையை தன்மடியில் வைத்துக் கொள்ளத்தோணியது.

அதற்குள் தணா அவளிடம் அதுதான் கடற் காக்கை என்றான். கடற்பாசிகளை ஒட்டிய

பாறையில் நின்று கொண்டிருந்தது. பாறை ஓரத்தில் நின்றபடி அலைவரும் நேரத்தில் பாறைக்கு வரும் மீனைக் கொத்தித் தின்பதற்காக நின்று கொண்டிருந்தது. அலைகளின் வேகம் அதிகரிக்க, அதிகரிக்க பாறைமேட்டில் நின்றபடி இரை தேடிக் கொண்டிருந்தது. அவளுக்கு அதன் லாவகமான பறத்தல் பிடித்திருந்தது. அலைகள் பெரிதாகி உயர்ந்த வேளையில் அது பறந்து விவேகானந்தர் மண்டபம் போய் மறைந்ததை பார்த்துக் கொண்டிருந்தாள். கண்முன்னே இருக்கும் பாறையில் இரைதேடிய பறவை எங்கே போயிருக்கும். வாழ்க்கை எல்லோரையும் ஏதாவது ஒரு திசைக்கு அடித்துக் கொண்டு போகிறதுதானே. இதில் யார் தப்பிக்க முடியும்.

தனா இன்று சூரியன் உதிப்பதற்கான வாய்ப்பில்லை என்றான். கிளம்புவோம் என்று அழைத்தான். அவள் பிள்ளைகளைப் பார்த்தாள். பிள்ளைகள் சளசளவென பேசிக் கொண்டே இருந்தன. என்ன பேசுகிறார்கள் அப்படி என்று காதைத் தீட்டிக் கொண்டு இருந்தாள்.

''சூரியன் உதிக்கிற எடத்துல போயி விவேகானந்தருக்கும். வள்ளுவருக்கும் ஊடு கட்டுனா எப்டி சூரியன் உதிக்கிறது தெரியும்”

“ஆமாக்கா. அதான் இன்னிக்கு உதிக்கிறது தெரியல. சரி போவ வேண்டியதுதான்.”

கடலையே பார்த்துக் கொண்டிருந்த மக்கள் கதிரவனின் உதிப்பு தெரியாததால் கலைய ஆரம்பித்தார்கள். “ஏய்.புள்ளங்களா எல்லோரும் கிளம்புங்க. இன்னிக்கு சூரியன் வராதாம். வாங்க போவோம்”, என்றது அம்மா.

''அம்மா அப்போம் இன்னிக்கு சன் வராதா பாட்டி..?'' என்றான் சிப்பிகளை கையில் வைத்துக் கொண்டிருந்த பையன். அவன் கைகளிலும் உடையிலும் கடல் மண் அப்பியிருந்தது. அவன் கடலை சிறு துகளாக்கி கொண்டு போவதைப் போலத் தெரிந்தான். மணி அடித்துக் கொண்டு கம்பில் பஞ்சு மிட்டாய் கோர்வையுடன் வந்தவன் அவன் அருகில் நின்றான். பையில் கைவிட்டு பத்து ரூபாய் காசைக் கொடுத்து இரண்டு வாங்கியவன் ஒன்றை தங்கையிடம் வீசினான். அவள் சூரியன் பார்க்காத கவலை இருந்தது. அம்முக்குட்டியைப் பார்த்தாள். குழந்தை பொக்கை வாயை விரித்து சிரித்தது.

சிறுமி வானத்தைப்பார்த்து விட்டு குழந்தையிடம் சொன்னாள். ''புஜ்ஜி, வானத்தைப் பாரு” என்று சொல்லிவிட்டு மீண்டும் கடலைப் பார்த்தாள்.

“ப்ளீஸ் சன் கொஞ்சம் வாயேன். எங்க அம்முவுக்கு காட்டணும்.” பஞ்சு மிட்டாய் தின்று வாய் சிவந்திருந்த பையன் அவள் சொன்னதைப் போல வானத்தைப் பார்த்து உரக்கச் சொன்னான்.

''ப்ளீஸ், சூரியனே வா, வா ப்ளீஸ்'', எல்லோரும் அவனைப் பார்த்தார்கள். பாட்டி குழந்தையை மருமகளிடம் கொடுத்துவிட்டு காலை நீட்டி எழுந்தது.

“அப்ப சூரியன் வராதா பாட்டி. எங்க போயிருக்கும் பாட்டி..?”

“சூரியன மேகமும் பனியும் மறைச்சிருக்கு. உச்சிக்கு வரும் போது பாக்கலாம்டி. வாங்க போவோம்” என்றது.

அமிர்தா அந்தக் குடும்பத்தினர் போவதையே பார்த்தபடி இருந்தாள். அவள் சூரியன் உதித்ததைப் போல மகிழ்ச்சியில் இருந்தாள். தனா அவளை மெதுவாக கீழிறங்கச்சொல்லி கைபிடித்து நிற்க வைத்தான். ரோஸ் கலர் டவலுக்குள் பொதியப்படிருந்த குழந்தை அவளைப் பார்த்துச் சிரித்தது. மெதுவாக அமிர்தா பிள்ளைகள் பேசியதைச் சொல்லிக்கொண்டே வந்தாள்.

“பிள்ளைகளின் உலகம் நம்மை விடப் பெரியதுதான். அவர்களால் பறவை. மிருகங்களாக மாறவும், பறக்கவும் முடியும் என்று அமி. ஆனா நீயும் பாதிக் குழந்தைதான்”, என்றான். தலையை குலுக்கி ஏற்றுக் கொண்டாள் அமிர்தா.

பரட்டை தலையோடு வந்த சிறுமி, ரப்பர் பேண்டு இருவது ரூவாக்கா. வாங்குக்கா என்றாள். தன் பேக்கைத் திறந்து பணத்தை எடுத்துக் கொடுத்து வாங்கிக் கொண்டாள். எல்லாச் சிறுமிகளும் அவள் மனதில் தன் குழந்தையின் சாயலாய் நின்று கொண்டிருந்தார்கள்.

கைகளால் தன் துப்பட்டாவை விரித்து வயிற்றோடு கையை வைத்துக் கொண்டாள். குழந்தையின் துடிப்பு கேட்கிறதா என்று பார்த்தாள். சின்ன அசைவுகளோடு ஏதோ இருப்பதைப் போல உணர்ந்தாள். அவளுக்கு பெண் குழந்தைதான் வேண்டும் என்று ஆசைப்பட்டாள். அதுவும் எந்த உறவும் இல்லாத சூழலில் சுகமாகப் பிறக்கணும். வேறொன்றும் தோன்றவில்லை. அம்மா ஆதரவிருந்தால் இந்தக் கவலை வேண்டாமே என்றிருந்தது. ஆனாலும் தனாவின் நேசம் எல்லாவற்றையும் தாண்டி இருப்பதாக உணர்ந்தாள். தனா தேநீர் கடையில் இரண்டு தேநீர் கேட்டபடி இருந்தான். சேட்டன் கடையில் வரிசையாக ஆப்பம் அடுக்கி வைக்கப்பட்டிருந்தது. வெள்ளையாய் ஓரங்கள் மெல்லிசாக இருந்தது. ஆப்பத்திலிருந்து ஆவி பறந்தபடி இருந்தது. வருத்தமான முகத்தில் சூரியன் தெரியவில்லை என்று கேட்டார். ஒண்ணும் எண்ணாதீங்கோ. அந்தியில முட்டத்துக்குப் போங்கோ. சன்செட் பிரமாதமா இருக்கும் என்றார்.

கடல் எல்கைச் சுவரில் இருந்த பாட்டியும், குடும்பமும் முன்னால் போய்க் கொண்டிருந்தார்கள். பிள்ளைகள் ஐஸ்சை சூப்பிக் கொண்டு ஓடினார்கள். தேநீரைக் கொடுத்துவிட்டு தனா கேட்டான். “என்னா வீட்டு நெனப்பு வந்துட்டா”

அவள் அந்தக் கேள்விக்கு பதில் இல்லை என்பது போல சிரித்தாள். அவனிடம் உனக்கு என்ன குழந்தை வேணும் என்று கேட்க எண்ணினாள். அவன் பிறக்கிற பிள்ளை போதும் என்றான்.

''என்ன சொல்றே தனா. தெளிவாச் சொல்லு. என்ன குழந்தை”

“அமி, கலியாணம் பண்ணிட்டு. உங்க ஊட்டுக்காரங்களால எனக்கு என்ன ஆவுமோ பயப்படாத ஆம்பளப் புள்ளே, இல்லாட்டி எல்லாத்தையும் வுட்டுட்டு ஓடி வந்துட்டமேன்னு நினைக்காத பொம்பளப் புள்ள வேணும். என்ன சரிதானா.”

“தனா, விளையாடாதே. கரெக்டா சொல்லு”

அவன், “உனக்கு வேல இல்லே. எந்தப் புள்ளயும் எனக்கு புள்ளதான். உன்னோட சேத்து ரெண்டு புள்ளங்க. அம்புட்டுதான்.” என்று சொல்லியபடியே தேநீர் கோப்பையை வாங்கிக் கொண்டு கடைக்குள் போனான்.

அவள் தன் வயிற்றைத் தடவிப் பார்த்தாள். தனாவின் உயிர்த் துடிப்பை உணர்ந்தாள். ●

---

விட்டெறிந்த காகிதம்
தலைக்கு மேலே பறக்கிறது...
பறவையின் சாயலில்.

⊙ ⊙ ⊙

அசையும் திரைச்சீலை
சொல்லாமல் சொல்கிறது
அம்மா வரும்நேரம்.

⊙ ⊙ ⊙

ஆசையாக பறித்த ரோஜா
குத்தும்போதுதான் தெரிகிறது...
கூடவே முட்கள்.

⊙ ⊙ ⊙

கழட்டி வைத்த முகமூடி
எடுத்து மாட்டுகையில்
தொலைந்திருந்தது சிரிப்பு.

கடக்க முடியாமல்
தயங்கி நின்றது நத்தை
கொதிக்கும் தார்ச்சாலை.

– மு.முருகேஷ்

சாந்தா தத்



# தெலுங்குக் கவிதைக் கோலத்தின் சில புள்ளிகள்

நம் பாரதியால் சுந்தரத் தெலுங்கு என அடையாளப்படுத்தப்பட்ட சுந்தரத் தெலுங்கின் படைப்பிலக்கியத்திற்கு ஆயிரமாண்டு வரலாறுண்டு. கவிதை எனும் வடிவத்துக்கு முதல் வித்திட்டவர் நன்னய்ய!. மா பெரும் காவியமான மகாபாரதத்தை வட மொழியினின்று தெலுங்குக்குக் கொண்டு வந்த பெருமையும் இவருக்குண்டு. பின் வந்த காலக் கட்டத்தில் திக்கன்ன..எர்ரன்ன.. போதன..வேமன....திலக்..ஸ்ரீநாதுடு..ஸ்ரீஸ்ரீ... குந்தூர்த்தி... .விசுவநாதம்.....ஜாஷ்வா.... குருஜாட அப்பாராவ்...குண்டூர் சேஷேந்திர சர்மா...செரபண்டராஜு....ஜ்வாலாமுகி...... நிகிலேஷ்வர்... வரவரராவ்...... நாரயணரெட்டி... சிவாரெட்டி........சொல்லிக் கொண்டே போனால் பக்கங்கள் நீண்டு விடும்... இவ் வரிசையில் எண்ணற்ற மகாகவிஞர்களின் பேராளுமை தெலுங்குக் கவிதைத் தளத்தில் வியாபிதம் கொண்டுள்ளது. பின் வந்த காலங்களில் பல்வேறு மாற்றங்கள்... முயற்சிகள்.... புதுமைகள் களம் கண்டன. இவைகளுடன் வேற்று மொழி இலக்கியங்களின் நவீனப் போக்குகளையும் உத்திகளையும் தளங்களையும் தன்மைகளையும் ஆர்வமுடன் அங்கீகரித்துச் சிலாகிக்கும் ஆழ்ந்த இலக்கிய ரசனை ஆந்திர இலக்கிய வட்டத்தின் தனிச் சிறப்பு.!

இருபதாம் நூற்றாண்டில் ஆங்கில இலக்கியத் தாக்கம் காரணமாய் தெலுங்கில் நவீனத்துவம் பெருமளவில் காணவியன்றாலும் அதன் இன்னொரு பாதிப்பாய் கவிதைகளில் ஆங்கிலச் சொற்களின் பயன்பாடும் அதிகளவில் இடம் பெறத் துவங்கி... இன்றும் தொடர்கிறது என்பது பெரு வருத்தம் தான். (தமிழ் கவிதைத் தளத்தில்.. எங்கோ சில விதி விலக்குகள் தவிர்த்து... அறவே காண முடியாத போக்கு இது.). இந்த விஸ்தரிப்பின் தொடர்ச்சியாய் முற்போக்கு இலக்கியம் (*progressive*)... மற்றும் வர்க்கப் போராட்ட (*revolution*) வெளிப்பாடுகள் போன்றவை அரை நூற்றாண்டுக்கும் மேலாய் ஆதிக்கம் செலுத்தி வந்தன. காலப் போக்கில் இத் தன்மைகள் தெலுங்குக் கவிதைப் பரிமாணத்தின் ஆழமான அடித் தளமாக இருப்பு கொண்டு விட்டது.!

அடுத்து... 1980களில் பெண்ணியம் கவிதைகளின் உரத்த குரலாக.....பின் தலித்தியம்...ஏகாதிபத்திய எதிர்ப்பு (*anti-imperialistic*)... மைனாரிடி சார்பு நிலை.... எனப் படிப் படியாகப் பல்வேறு முகங்களில் கவிதைகள் பரவலான அடையாளமும் வரவேற்பும் பெற்று தம் முகவரியை வலுவாய் நிலைப் படுத்திக் கொண்டாலும். தெலுங்குக் கவிதை இலக்கியத்தில் அவ்வளவாய் வளர்ச்சியடையாத ஒரு பரிமாணமெனில் அது பின் நவீனத்துவம். (*post modernism*) என்பதைச் சொல்லித் தான் ஆக வேண்டும். இன்னொரு அதி முக்கிய குறையாக நான் உணர்வது... தரத்தைப் பொறுத்த வரை இன்று அமோகமாக வளர்ந்து விட்ட தமிழ் கவிதைகளில் காணப்படும் திண்மையும் இறுக்கமும் இருண்மையும் கட்டமைப்பும் கூர்மையும் தெலுங்குக் கவிதைகளில் காணக் கிடைப்பதில்லை.

மொழி வளமும் பாடு பொருளும் வெகு நேர்த்தியாக இருந்தாலும் சொல்ல வருவதை நேரிடையாச் சொல்லி விடுகிறார்கள். ஆனால் 'பாவ' கவிதைகள் (*bhaavam* ...உணர்வியல்) தெலுங்கில் ஒரு தனி முத்திரை பதித்திருப்பது போல் வேறெந்த மொழியிலும் இருக்காதோ எனும் ஐயம் எழுவதை மறைக்கவோ மறுக்கவோ முடியாது. வெகு நுணுக்கமான மன இயல்புகளையும் மயிலிறகால் வருடிக் கொடுப்பது போன்ற மென்னுணர்வுகளையும் பன்னீர் தூவலாய் இதமாய் வெளிப்படுத்தும் கவிதைகள் அன்றும் இன்றும் அநேகம்.... அநேகம்..!

அடுத்து....மொழியாளுமை...சொல்லாடல்... என எடுத்துக் கொண்டால் அந்தந்த வட்டார மண் வழக்கு... மைனாரிடிகளின் சொற் பயன்பாடு... போன்றவை தெலுங்குக் கவிதைகளில் அதீத கவனத்துடன் கையாளப்படுகின்றன.....!

இன்னும் நிறையச் சொல்லலாம். இடம் கருதி இப்போதைக்கு இத்துடன் நிறுத்தி......... நான் மொழியாக்கம் செய்த ஒரு தெலுங்குக் கவிதை ----------



## அகராதி (தெலுங்கில்-சௌபாக்யா)

ஒவ்வொரு அறையாய் திறக்கும் போதெல்லாம்
புராதனச் சுகந்தம்.....
விண் மீன் கூட்டம் நகர்ந்து செல்வது போல்
லட்சங்களில் லாந்தர்கள்
ஒளியிறைத்தபடி பயணிக்கின்றன
கேள்வியே கணங்களில் விடையாய் உரு மாறும்
அதிசயக் காட்சி கண்டு
மெய் சிலிர்த்து உடன் நடந்தபடி நாம்....
திறந்து கொள்ளும் துவாரங்களினூடே
கடந்தபடி நாம்....
நில மாளிகைப் பீபாய்களில்
நிறைந்துள்ள திராட்சை ரசம்
துவர்ப்பு மணம் இறைத்தபடி..
காலமெல்லாம் விகசிக்கும் இவ் வனத்துக்கு
அனைத்துத் திசைகளிலும் பாதைகள் தாம்!
எங்கோ இணைப்பு அறுந்து விட்டது
நாம் காயப்பட்ட பாடலொன்றைத் தோளேற்றி
இங்கு வந்து சேருவோம்
திக்கெட்டும் வியாபித்த இம் மரத்தடியில்
நின்றபடி
திகில் பார்வையுடன்
திக்கெட்டும் துழாவுகிறோம்
ரசவாத கணங்களில் காயத்தின் வலி கரைய..
மரத்தின் கருவினுள்
நிம்மதியாய் நடந்து செல்வோம்
எதிர்படும் சொல்லை நலம் விசாரிப்போம்
முத்துச் சிப்பியொன்று மெல்ல விழி திறந்து
நமக்கொரு நல் முத்தளிக்கும்
இருண்மைப் பள்ளத்தாக்கில் உரக்கக்
கத்துவோம்
எதிரொலித்தபடி ஒளிரும்
மின்மினிப் பூச்சிகளின் ஒளிக் குவியலில்
நமக்கொரு வழி புலனாகும்!
இங்கு ஆகாயத்தை அசைக்கும் போதெல்லாம்
மழை பொழிகிறது
மூங்கில்கள்.....வன மூலிகைகள்
ததும்பி வழியும் இக் காட்டில்
வழி தவறி அலைவதற்காய்
மனம் விழைகிறது
தன்னந்தனியாய் கண் போன போக்கில் நடந்து
நாளுக்கு குறைந்த பட்சம்
நூறு குழந்தைகளுடன் மீள்கிறோம் நம்
பிரபஞ்சத்துக்கு..
பிரவாகித்தோடும் தெள்ளிய நதியில்
புனிதக் குளியலில் சிலிர்த்தெழுவோம்..!
இம் மாயப் பல்லாக்கேறி உலகம் சுற்றி வருபவர்
எத்தனை பேரோ..!
இம் மதுவருந்தி மயக்கத்தில் மூழ்கியோர்
எத்தனை பேரோ..!
இவ் வானமெங்கும் சாவிக் கொத்துக்களே....
இவ் வனமெங்கும் லாந்தர் சுடர்களே......!!

❖❖❖

**எஸ்.சங்கரநாராயணன்**



# நில் எனப் பெய்யும் மழை

2004 திசம்பர் வாக்கில் சுனாமி சென்னையைத் தாக்கியது. அதற்கு அடுத்த பெரு நிகழ்வாக 2015 திசம்பரில் சென்னை கண்ட பெருமழையும் அதைத் தொடர்ந்த வெள்ளப்பெருக்கும். பிறகு 2016 ல் அதுவும் திசம்பர் மாதம்தான், சென்னையைத் தாக்கியது வார்தா புயல். இவற்றைப் பற்றியெல்லாம் போதுமான அளவில் படைப்புகள் எழும்பி வரவில்லை என்பது ஆதங்கமான விஷயம் தான். அரசியல் ரீதியான பெரும் சட்டாம்பிள்ளைத் தனங்களில் தமிழ் சிக்கி, அடங்கிக் கிடக்கிறது. ஆனால் ஆவணங்களுக்கு நடுவே, புனைவுகள் தான் அந்த அவலங்களை மேலும் காத்திரமாக, உக்கிரமாக பிற்கால சந்ததிக்கு எடுத்துரைக்க வல்லவை.

சைலபதி 2015 சென்னைமழை பற்றிய தன் அவதானிப்பை மனசிலேயே விளைவித்து நாவல் என அறுவடையாக்கியிருக்கிறார். 'பெயல்' என்கிற அவரது சமீபத்திய நாவல் அந்த நிகழ்வைச் சுற்றியும் நேராகவும் தொட்டுப் படர்ந்து பரவுகிறது. நேரடிப் பாத்திரங்களே அவருக்கு இதில் உதவிகள் அதிக அளவில் செய்திருக்கின்றன. பெருமழை பற்றி முன்பே தனிநபர் வானிலை ஆய்வாளர் சிலர் எச்சரித்தும் அரசு அதைக் கண்டுகொள்ளவில்லை. பிரச்னையைக் கையாள்வதில் அரசு தரப்பில் நிகழ்ந்த குளறுபடிகள் அல்லது அலட்சியம். பொதுமக்கள் நலனைப் பற்றிய அக்கறையின்மை என இவற்றையெல்லாம் பதிவிடாமல் முடியாது. அந்தச் சூழல்தான் சைலபதியை நாவலை எழுத இயக்கியிருக்கிறது. அவற்றை தான் உணர்ந்த அல்லது அனுபவித்தபடி கேட்டபடி சைலபதி எழுதாமல், அந்தப் படைப்பில் நம்பகத் தன்மை இராது, இந்த நாவலை வாசிக்கிற வாசகன் இந்த நிகழ்வைப் பற்றி ஒரு சுய அபிப்ராயம் ஏற்கனவே வைத்தபடிதான் இந்தப் படைப்புடன் கூட நடந்து வருவான். அது சைலபதிக்குத் தெரிந்திருக்கிறது. என்றாலும் இது புனைவு, ஆவணம் அல்ல இது. வாசகனை அதன் உயிர்த்துடிப்புக்கு சைலபதி உள்ளிழுக்க தன் புனைவு சுதந்திரத்தை அழகாகப் பயன்படுத்தியிருக்கிறார்.

சமுதாயத்தின் பலமட்ட மனிதர்களை, நிதியாதாரத்தில் பல தரப்பட்ட பாத்திரங்களை எல்லாரையும், யார் ஒருவரையும் இந்த மழை விட்டு வைக்கவில்லை. இந்த நிகழ்வில் அரசின் குளறுபடிகள் தவிர மனிதனின், நம் தவறுகள் என்னென்ன, அவற்றையும் சைலபதி வெளிப்படுத்தி அடையாளங் காட்டும் போது தான் நாவல் ஒரு முழு சுற்றுக்கு வருகிறது. நதித்தடத்தில், ஏரிகளில் வீடுகட்டி வழியடைத்துக் குடியேறிய மக்கள். மழைப்பெருக்கில் நதி தன் தடத்தைக் கண்டடைய முயற்சி செய்கிறபோது தம் வாழ்க்கைக்கு வழி தெரியாமல் மக்கள் திகைத்துப் போன கதையை அவர் சொல்கிறார்.

என்றாலும் இது ஒரு அழிவின் கதை அல்ல, என்பதுதான் நமக்கு ஆசுவாசம். வாழ்க்கை மிச்சம் இருக்கிறது. மனிதன்.... அவனுடன் மனிதம் மிச்சம் இருக்கிறது. இப்படி நெருக்கடி காலங்களில் சின்னவன் பெரியவன், ஏழை பணக்காரன், சாதி, மதம் என்கிற வேறுபாடுகள் சிறுத்துப் போகின்றன. அவை சிறியவையே என்று கண்டுகொள்கிற நேரமாக அது இருக்கிறது. இளைஞர்கள், யாரும் சொல்லாமலேயே இந்தப் பேரிடரில் மீட்புப் பணி என தங்களை அர்ப்பணித்துக் கொண்டார்கள். அதைப் பற்றிய ஆரோக்கியமான பதிவுகள் இதில் உள்ளன.

**நாவலில் சைலபதி நிகழ்த்திக் காட்டும் பல்வேறு வாழ்க்கைகள், ஏழைகள், பணக்காரன் என்கிற பேதங்களைத் தாண்டி, இளையவன் முதியவன் என்கிற அம்சங்களையும் சொல்லிக் கடந்து அதுவே பெரு நதியாய் தடம் பதித்துச் செல்வதுதான் கதையின் வெற்றி.**




**பெயல்**

**நாவல் - ஆசிரியர் சைலபதி.**

**பக்கங்கள்: 190. விலை: ரூ. 180/-**

**வெளியீடு: யாவரும் பதிப்பகம்.**

மேலே ஏழெட்டு மாடிகள் தவிர தரைமட்டத்துக்கு அடியில் இரண்டு மூன்று தளங்கள் கொண்ட ஒரு பெரு நிறுவனத்தில் மழை நீர் புகுந்தபோது தப்பிக்க வழியில்லாமல் அந்த நீரில் அமுங்கி இறந்து போனவர்களைப் பற்றிய தகவல்கள் மறைக்கப் பட்டுவிட்டன. சைலபதியை அந்தச் சூழல் தான் பெரிதும் வாட்டுகிறது. வெறும் யதார்த்த பாணி விவரிப்பாக அல்லாமல் சற்று அமானுஷ்யம் சார்ந்து சைலபதி இப்போது தன் புனைவு வெளியில் வளைய வருகிறார். எனில் இது மாய யதார்த்த வாதம் அல்ல. இந்தப் பெருமழையை மொட்டைமாடிக்கு வந்து மழையில் நனைந்தபடி தரிசனப்பட்ட ஒருவன் விக்கித்து நா உள்ளிழுக்கப் பட்டுப் போகிறான். அவனை மீண்டும் சீராக்கப் போராடும் அவன் மனைவி. மருத்துவர்கள், பிறகு சாமியார்கள் என அவள் அலைகிறாள். பரமபதத்தில் பாம்பிடம் சிக்கியவள் அவள்.

இந்த வெள்ளத்தில் மூழ்கி இறந்துபோன ஒரு காவல்காரனும், ஐ ட்டி காதலன் ஒருவனும் இறந்தபின்னும் கதையில் வந்து போகிறார்கள். இளம் இந்தக் காதல் ஜோடி தவிர, சிறிய வீட்டில் குழந்தையுடன் கணவனுக்கு இணக்கம் காட்டும் ஒரு மனைவியின் காதல் ஒரு ருசிகர வசிகரம். இன்னும் வசதி அளவில் மேம்பட்ட அடுக்ககக் காதல் என வாழ்க்கை அதன் இயல்பான வேட்கைகளுடன் கதை நெடுகிலும் நடமாடுகிறது. மகனை மருமகளுடன் விட்டுவிட்டு, தான் படுக்க என வெளியே கோவில் திண்ணை எனப் போகும் பெரியவர். பெரியவரின் இருமல் பற்றிக் கவலை காட்டும் மருமகள். வாழ்க்கை எடுத்துக் கொள்ளுதலும் விட்டுக் கொடுத்தலுமாக, இரண்டுமாகத் தான் இருக்கிறது எல்லாருக்கும்.

வெள்ளம் என வந்தாலும் வாழ்க்கை பற்றிப் பேச சைலபதிக்கு விஷயங்கள் ஊற்றாய் வந்தபடியிருக்கின்றன. நுட்பமான அவதானங்களாக அவையே கதையை அற்புதமாக கடைசிவரை நகர்த்திச் செல்கின்றன. நாவலில் சைலபதி நிகழ்த்திக் காட்டும் பல்வேறு வாழ்க்கைகள், ஏழைகள், பணக்காரன் என்கிற பேதங்களைத் தாண்டி, இளையவன் முதியவன் என்கிற அம்சங்களையும் சொல்லிக் கடந்து அதுவே பெரு நதியாய் தடம் பதித்துச் செல்வதுதான் கதையின் வெற்றி. மனிதர்கள் எல்லாரையும் ரெண்டு கையும் விரித்து நேசித்துக் கட்டியணைத்துக் கொள்ளும் மனம் சைலபதியுடையது. பாத்திரங்களில் நாம் ஆசிரியரையே காண வாய்க்கிறது.

ஒரு மனைவி. கணவன் அவளை உடல்வேட்கை ததும்ப அருகே அழைக்கிறான். அவரது தவிப்பு அடங்கியதும் அவருக்குப் பசிக்குமே, என்று சமையலை சிரத்தையாக முடித்துவிட்டு வருகிறாள் மனைவி. பெண் என்பவள் தாய்மையின் அம்சம் என்கிறார் சைலபதி. எழுத்தாளனே அப்படித்தான் என்பதாக நாம் உணர்கிறோம். மானுட மேன்மையை நோக்கி நகரும் எழுத்துக்கு எப்போதுமே தனி ஈரப்பு சக்தி உண்டு. கடைசிவரை கீழே வைக்க முடியாத சுவாரஸ்யம் நாவலுக்கு உண்டு. வாசிப்பவர் அதிர்ஷ்டசாலிகள். •

க.அம்சப்ரியா



# அருவியில் நனையும் கவிதைகள்

**(அருவி - வெள்ளிவிழா சிறப்பிதழ் - 2017 மலர் கவிதைகள் ஒரு பார்வை)**
**கவிதை இலக்கியக் காலாண்டிதழ்**

கவிதை எழுதுவதென்பது கவிஞன் தன்னைத் தானே உழுது, பண்படுத்தி, தானே ஒரு விதையாக மண்ணில் விழுந்து முளைத்து, விருட்சமாகி, வாசகப் பறவைகளுக்கு இளைப்பாறுதலைத் தருகிற வரம். கவிதையைக் கொண்டாடுவது என்பதும் கவிஞர்களின் கவிதைகளை வெளிப்படுத்த ஒரு களம் அமைத்து, அதை அரிய செல்வமாக, ஒவ்வொருவரின் மனதினும் பாதுகாப்பாக வைத்திருக்க உதவுவது என்பதும் கவிதைகளின் காவலனாக தன்னை மாற்றிக் கொள்கிற எளிய வாழ்க்கை.

திக்கெட்டும் தேடித்தேடி கவிதைகளை வாசிக்கத்தருகிற இந்த சீரிய செயலைத்தான் காவனூர் ந.சீனிவாசன் இடையறாது செய்கிறார். கவிதை இலக்கியக் காலாண்டிதழ் என்று தான் பெயரிட்டிருக்கிறார். ஆனால் அருஞ் செல்வமென உலகிற்கு கூறுகிற கவிதைத்தாங்கல் என்றுதான் கூறவேண்டும்.

வெள்ளிவிழா சிறப்பிதழாக வாசகர்களின் பார்வைக்கு வந்திருக்கும் அருவியில் நனைய நனைய வெப்பத்தின் தீக்கங்குகளையும், மென்குளிரின் வாடையையும், சாரலின் அலையையும் உணர முடிகிறது. அருவிக் கரையில் அறியாதன அறிகிற விழிப்பார்வையில் தென்படும் சில அபூர்வங்களையும் உள்ளிறக்கி இருக்கிறது.



வாழ்வுதான் அரிதினும் அரிது. ஆனால் அந்த வாழ்வு, உண்மையின் காயம்பூசப்பட சொற்களாகவும், செயல்களாலும் நிறைந்திருக்கிறது.

அப்படியான வாழ்வின் ஒரு பகுதிதான் யாரோ ஒருவரைப் பற்றி நம் நாவுகள் புரளிகளை கட்டவிழ்த்து விடுவதும், பொய்யானவர்களை புகழ்ந்து பரப்புரை செய்வதும்... இப்படியான ஒரு சூழலை சூரியதாஸ் கவிதையின் வழியே பிரச்சனை+தீர்வென எதிர்பார்ப்பாக்குகிறார்.

**வதந்திகளால் அலங்கரிக்கப்பட்ட**
**சவப்பெட்டி ஒன்று**
**கைவசமிருக்கிறது ஒவ்வொருவரிடமும்**
**மர்ம ஆணிகளால் அதன்வாய்**
**அடைக்கப்பட்டிருக்கிறது பாதி திறந்தபடி**
**கண்ணுக்குத் தெரியாமல்**
**பூக்கள் நெளிந்தபடியும்**
**இருக்கின்றன**
**ஒப்பாரிக்கான பாடல் அதிர்வுகள்**
**தீவிரமடைந்திருக்கின்றன**
**போலியாய் நீலிக்கண்ணீர்விடச்**
**சிலர் தீவிர ஒத்திகையிலிருக்கிறார்கள்**
**அதன் தேவை நிஜமாகும் நாளில்தன்**
**மெய்ப்பாடு**
**கச்சிதமாய் இருக்க வேண்டும் என்பதே பலரின்**
**கவலையாய் இருக்கிறது**
**அது பொய்யாகிப் போனால்**
**வேறு வாசல்களில் வைத்துவிட்டுச்**
**சோர்வுடன்**
**அலங்காரத்திற்காக வேறு வதந்திகளைத்**
**தேடிப்போகலாம்**
**நமக்கான சவப்பெட்டியை**
**யார் யாரெல்லாம் ஆவலுடன் இப்போது**
**தூக்கித் திரிகிறார்களோ**
**நாம் இறந்தபிறகு**
**நமக்கான சவப்பெட்டி செய்யும் படியாய்**
**வாழ்ந்துவிட்டால் போதும்.**

**–சூரியதாஸ்**

கவிதை ஒரு பிரச்சனையை மையமிடுகிறது. எது வாழ்வென்று நம் கைகளைப் பார்த்துச் சொல்லாமல் சொல்கிறது. நாம் இறந்தபிறகு நமக்கான சவப்பெட்டி செய்யும்படியாய் வாழந்துவிட்டால் போதுமென ஒரு எதிர்பார்ப்பை கூறுகிற போது, இதை விட வேறு விதமாக என்ன வாழ்ந்து விடப்போகிறாய்.. என்றொரு சாட்டையையும் சுழற்றுகிறது.

வாழ்வென்பது யாரோ உணர்த்தும் ஞானப் பாதையல்ல.. அப்படியொரு யாரோ ஒருவரின் உணர்த்துதலில் நகரும் வாழ்வுதான் பெரும் சுமையென போகிற வழியெல்லாம் எதையாவது தூக்கிச் சுமக்கிறது... தத்துவம், கோட்பாடு, ஞானமென்று தேடி தேடி அலைகிறது.

வாழ்வென்பது உணர்தல். இந்த உணர்தல் கவிதையின் வழியாக நிகழ்கிற போது, வாழ்வின் கரையில் மகிழ்ச்சியோ, துயரமோ உண்மையின் பொங்குதலை உணர இயலும். அப்படியொரு உணர்தலின் மெல்லிய இழையை நமக்கு அடையாளங்காட்டுகிறார் ஏ.நஸ்புள்ளா

**நாற்காலியொன்றிலிருந்தே**
**அந்த சிறு இலை**
**பறக்க ஆரம்பித்தது**
**அதில் சருகின் வாசனை நிறைந்திருந்தது**
**அது ஒரு சிறுமியின் கோட்டோவியம்**
**அந்த இலை**
**அங்கும் இங்கும் அசைவதை**
**சிறுமி நீண்ட நேரமாக**
**பார்த்துக் கொண்டிருக்கிறாள்**
**திடீரென ஆகாயத்தில்**
**அழுகுரல் கேட்கிறது**
**இலை அழுவதாகவே சிறுமி உணர்கிறாள்**
**ஒரு நட்சத்திரம்**
**அல்லது நிலவு வந்து**
**வயலின் வாசித்தால்**
**இலை தூங்கிவிடும் என நினைத்து**
**சில பட்டாம்பூச்சிகளிடம் முறையிடுகிறாள்**
**பட்டாம்பூச்சிகள் கடவுளைப் பிரார்த்திக்கின்றன**
**அதிசயம் சிறுமியின் மடியில் வந்து**
**இலை விழுகிறது**
**இனி என் கற்பனை**
**ஒரு புல்லாங்குழலை இசைத்;தபடி**
**அடுத்த அடுத்த சொற்களுக்குள்**
**முன்னோக்கி நகர்கின்றது**

உணர்தலின் வரமான சொற்களுக்குள் பயணிக்க இந்தக் கவிதை வாய்ப்பொன்றை தருகிறது.

எப்போதும் கடினமானதும், செயல்படுத்த இயலாததுமாக உறுத்துவது, நாமாக வாழ்ந்துவிட நினைப்பதுதான். நாம் யார் என்று நமக்கு நாமே ஒரு வினாவினை எழுப்பிக் கொள்ளாத வரை பூட்டப்பட்டிருப்பது அடிமை விலங்குகள் என்பதை அறிய இயல்வதில்லை. இப்படியொரு வாழ்வின் துர்நிமிடங்களை கவிஞர் ப.காளிமுத்து குறைந்த வரிகளில் கவிதையாக்கி விடுகிறார்.

**சுவாசிக்க மறந்த**
**அந்நொடிகளை யாசித்ததற்கு**

விரட்டப்படுகிறேன்
மீண்டு ஒருமுறை
ரசித்தலில் மிரட்டப்படுகிறேன்
புதர்களாயினும் புகழ்பாட
இம்சிக்கப்படுகிறேன்
காமமற்று தீண்டுகையில்
சபிக்கப்படுகிறேன்
புத்திகளற்று புரிதலில்
திணிக்கப்படுகிறேன்
இனியும் கூற நாதியில்லை
நான் நானாக இருக்கிறேன் என்று.

– ப.காளிமுத்து

எதிர்பார்ப்புகளில்தான் நுரைத்துப் பொங்குகிறது வாழ்வெனும் நீர்வெளி. அதை அப்படியே சிதறாமல் கவிதைக்குள் பயணிக்கச் செய்து, தாகம் தீர்க்கிறார் அமிர்தா தமிழ்

இடம் மாற்றப்பட்ட
தொட்டிச் செடி / எதிர்பார்ப்பதெல்லாம் /
கொஞ்சம் தண்ணீர் / கூடுதலாய் வருடல்
நெருக்கமாய் சில செடிகள்

– அமிர்தா தமிழ்

அழகிய படிமம். அடர்த்தியான சொல்லாட்சி... கவிதையை வாசிக்கிற போதே நாம் எதை செய்ய வேண்டும் என்று சொல்கிற கவிதைகளில் ஒன்றாகவும் நம்மை ஈர்த்து விடுகிறது.

எப்போதும் ஒரு குரல் ஒலித்தபடியிருக்கிற அது நகரத்தின் பசிக்குரல். அன்பை, மனிதத்தை, பிரியத்தை மொத்த வாழ்வை தின்று ஜீரணித்தபின், மறுபடியும் அடங்காத பசியோடு, கிராமங்களை நோக்கிப் பயணிக்கிறது. போகிற வருகிறவர்களைப் பார்த்து, பரிகசிக்கிறது. இன்னும் ஏன் இப்படி இருக்கிறீர்கள்...? முன்னேறுங்கள்... முன்னேறுங்கள் என்று விதியின் கொடுங்கரமொன்று நகரமயமாக்க நகர்த்தியபடியே இருக்கிறது. கரிகாலனின் கவிதையொன்று இந்தச் சூழலை வெளிப்படுத்திவிடுகிறது.

வனத்தைப் பிளந்து உருவாக்கிய
நகரமென்பதால்
சில விலங்குகள் திரியக்கூடும்
குளத்தை மூடி உருவாக்கிய வீதி
என்பதால்
நீர்ப்பாம்புகள்
ஊர்வதுமுண்டு
விளைநிலத்தை அபகரித்த
மனைகளென்பதால்
இதன் பளிங்கு கற்களிடையே
அபூர்வமாய்
ஒரு நெற்பயிர்
எட்டிப் பார்த்து விடுகிறது
வாய்க்காலைத் தூர்த்து உருவான
விரிவாக்க மென்பதால்
சில மீன் குஞ்சுகள்
வெயில் அடித்துக் கொண்டிருக்கின்றன
காவல் புரிந்த நிலத்தைப் புடுங்கிய
நகரமென்பதால்
பாருங்கள்
இதன் தெய்வம் நடுவீதியில்
பைத்தியமாய்த் திரிகிறது.

– கரிகாலன்

கவிதை வீதியில் உலாவும் தெய்வங்களைப் பார்க்க உரிய வாய்ப்பினை இக்கவிதை நமக்குத் தருகிறது.

ஏதோவொன்றை வெளிப்படையாக உணர்த்தி விடுவது ஒருவகை கவிதையெனில், தான் கண்ட காட்சியொன்றின் வழியாக யாவரும் உணர, ஏதோ ஒன்றை உள்ளங்கையில் பதுக்கி, கண்டுபிடியுங்கள் பார்க்கலாமென அவரவர் கணிப்புக்கு ஒரு உலகை அடையாளம் காட்டுவது ஒருவகை கவிதை உத்தி... நெகிழன் ஆளுக்கொரு உலகைக் காட்டுகிறார்.

கிழவனொருவன் / குளக்கரையில் நின்று
குனிந்தபடி / தன் கைத்தடியால்
தாமரைகளை / தாமரை இலைகளை விலக்கி
நீரின் நிர்வாணத்தில்
தன் புன்னகையை / மிதக்க விடுகிறான்

–நெகிழன்.

மரணத்தை தவிர்க்க இயலாது. எனினும் நம் மரணத்தை நாமே உணர்கிற ஒரு ஞானப்புள்ளியில்தான் வாழ்வின் அனைத்து மகிழ்ச்சி துயரங்கள் மண்டிக்கிடக்கின்றன. உணரும் வாழ்வின் உன்னதம் என்பது, எரியும் சுடரை விழிகளின் வழியே இதயத்தில் படரவிடுவது. அப்படியொரு முத்தாய்ப்பு கவிதையை காவனூர் ந.சீனிவாசன் வழிப் பயணியாக்குகிறார்.

நடையாய் நடக்கிறேன்
வீட்டிற்கும் மயானத்திற்குமாய்
என்னை
தோளில் தூக்கிக் கொண்டு

யாருமில்லை / எல்லாவற்றையும்
எடுத்துப்போட்டுக் கொண்டு செய்ய
நானே செய்து / தலையில் தூக்கிச் சுமந்து
வர வேண்டியிருக்கிறது / என் சவப்பெட்டியை
விடிவதற்குள் / என் கண்ணீர் அஞ்சலி சுவரொட்டியை
அவசர அவசரமாய் / ஒட்டிக்கொண்டிருக்கிறேன்
அதிக வேலைகளுக்கிடையில் / எல்லோருக்கும்
தகவல் தந்துவிட்டேன்
என் இறுதி ஊர்வலத்தில்
என்னைத் தவிர வேறுயாருமில்லை

பிடிமண் இடுவதற் முன்
இறுதியாக ஒரு முறை
என் முத்தத்தை நானே
பார்த்துக் கொள்கிறேன்
ஒரு வழியாய்
என்னை அடக்கம் செய்துவிட்டு
ஆற்றில் தலைமுழுகிக் கொண்டிருக்கிறேன்
இதற்குமேல்தான்
நான் இறந்த செய்தியை
சொல்ல வேண்டும் எனக்கு

இன்றைய கல்விச்சூழல், பெற்றோர்களின் தேவையற்ற எதிர்பார்ப்பு, குழந்தைகளின் ஏக்கமென்று ஒட்டுமொத்தச் சூழலை வெளிப்படுத்தும் சமூகக் கவிதையாகவும் நிலைக்கிறது. கவிதைகள் சமூகம், இயற்கை, அகஉணர்வு, புறஉணர்வு என்று பல்வேறு தளங்களிலும் செயல்படுகிறது.

இவைகளைப் போல கவிதைகளால் இதழ் அழகுற பரிணமிக்கிறது. ஒரு கவிதையக் கொண்டாடுவதென்பது, கவிஞனைக் கொண்டாடுவதோ, திறமையைக் கொண்டாடுவதோ அல்ல... ஆரோக்கியமான எதிர்காலத்தை உருவாக்கும் பணி. மனிதநேயத்தையும் உழைப்பையும் உயர்த்திப் பிடிக்கிற லட்சிய வேட்கை. ஏதோ ஒரு மூலையில் சிறிதாக முளைவிடுகிற மனித நேய செடிக்கு நீரூற்றி, நீரூற்றி வளர்க்கிற தாய்மைப்பணி. அப்படியான பணியை மிகச் சிறப்பான முறையில் செய்து வருகிறார் காவனூர் ந.சீனிவாசன் அவர்கள்.

கவிதையின் பாதையில் பயணிப்போம்!

அன்பின் வேர்பிடித்து வளரும் சமூகத்தைக் கட்டமைப்போம்!

இதழ் : அருவி கவிதை
இலக்கியக் காலாண்டிதழ்,
வெள்ளிவிழா சிறப்பிதழ் – 2017
ஆசிரியர் : காவனூர் ந.சீனிவாசன்
முகவரி : அருவி, 14, நேரு பஜார்,
திமிரி–632512, ஆற்காடு வட்டம்,
வேலூர் மாவட்டம் •

தேங்கிய சாக்கடைக்குட்டையில்
இரண்டு நாள் முன்பு
ஈன்ற குட்டிகளோடு புரண்டு கொண்டு
பாலூட்டிக் கொண்டிருந்தது
பன்றி ஒன்று....

கரையோரம் சுற்றிச்சுற்றி
கதற கதற
குரைத்துக் கொண்டிருந்தது
ஒரு நாட்டு நாய்.....!

வெறிதனை அடக்கிக் கொண்டு
சினமாக
பற்கள் தெரிய உருமிக்கொண்டே
இருந்தது
அதே தாய்ப் பன்றி...!

நாய் போயிருக்குமா.....?
பன்றி விரட்டியிருக்குமா....?
சாந்தமாயிருக்குமா....?
குட்டிகள் பிழைத்திருக்குமா....?

விட்டுக் கவலை தொற்றாதிருக்கும் வரை
தொற்றிக் கொண்டு தான் நின்றது
கடந்த போது கண்ட கவலை ...!

– ப.தாணப்பன்

புதியமாதவி

# அலைகளின் தாய்



பசிபிக் கடலின் அலைகள்
என் கால்களை நனைத்தன.
பசிபிக் கடலல்ல.
அது சமுத்திரம். பெருங்கடல்.
கடல்களுக்கெல்லாம் தாய்.
என் ஆதித்தாய்.
அவள் ஆழமானவள். அழகானவள்.
அவள் பச்சை நிறத்தில் என்
மதுரை மீனாட்சியைப் போல
ஜொலிக்கிறாள்
அரசு அதிகாரங்களை மட்டுமல்ல,
அறிவின் அதிகார செருக்குகளையும்
அடக்கி ஆளும் என் பெருந்தேவி.
வானத்தின் நீல நிறத்தை எடுத்து
உடுத்திக்கொள்கிறாள்.
அவள் காதலின் நஞ்சு
அவள் உடலெங்கும் பரவி
காதலை உயிர்ப்பிக்கிறது.
காதலர்கள் மீண்டும் மீண்டும் முத்தமிட்டுக்
கொள்கிறார்கள்.
ஊடலும் கூடலும் அலை அலையாய் கரைகள் எங்கும்.
அவள் மைவிழிக் கருமையில் கொற்றவையின் சீற்றம்.
மண்டை ஓடுகள் மண்ணுக்குள் புதைகின்றன.
சிங்கத்தின் பிடரியில் அவளே ஆயுதமாய்
களப்போரில் பிதாமகன் பாவத்தின் சுமையுடன்
மரணத்திற்காகக் காத்திருக்கிறான்.
அவள் அலைகளில் நர்த்தனமாடும் ஆண்டாள்.
கட்டித் தழுவி அழும் போது
அவள் மாலைகளும் சேர்ந்தே கண்ணீர் வடிக்கின்றன..

என் பெருமூச்சில் அவள் கொஞ்சம் கொஞ்சமாகக்
கரைந்து போகிறாள்.
அரபிக்கடல் நலமா? இந்துக்கடலின் ஆட்டம்
அடங்கிவிட்டதா?
குமரியில் இருக்கும் என் புதல்வி நலமா?
அவள் நலம் விசாரிக்க ஆரம்பித்தாள்.
இப்போது நான் அழ ஆரம்பித்துவிட்டேன்.
எத்துணை யுகங்கள் கடந்துவிட்டது?
தீவுகளில் இன்னும் அரக்கர்கள் எம் பச்சைக்கிளியை
அடைத்து வைத்திருப்பதை அவள் அறிவாளா?
கண்ணீரின் சூட்டில் மணல் சிதறியது.
நிறம் மாறியது.
அலைகள் என்னையும் என் கண்ணீரையும்
நனைத்துக் கொண்டிருந்தன.
அவன் வேகமாக விசைப்படகில் அலைகளை எதிர்த்து
சாகசங்கள் நடத்துகிறான்.
மணல் மேடையில் அவள் இரு கமலப்பூக்கள்
சூரியனை எட்டிப் பார்க்கின்றன.
அவள் கண்களில் கண்ணாடி அணிந்து
படுத்திருக்கிறாள்.
திருட்டுத்தனமாக சிலர் அவள் தொடைகளின்
மினுமினுப்பை
பார்த்து செல்கிறார்கள்.
சூரியன் மெல்ல மெல்ல அவள் மேனியில் படர்கிறான்.
அவள் பசலை மறைகிறது.
கோடி சூரியன்கள் அவள் கருப்பைக்குள்.
நான் முத்தமிடுகிறேன் அவளை.
அலைகள் உப்புக்கரிப்பதில்லை.
இதழ்கள் இன்னும் இன்னும் விரிகின்றன.
இரவு கவிகிறது.
படுக்கையில் நட்சத்திரங்கள் காத்திருக்கின்றன.
அவள் என்னைத் தாலாட்டுகிறாள்.
அலைகளின் தாலாட்டு...
எனக்கு மொழியும் தேசமும் இல்லை
அலைகளின் தாலாட்டு.

# வாசனை

சதுர மரச்சட்டத்தின்
உள்ளிருந்து
கருப்பு சோடாபுட்டியின்
விரிந்த கண்களால் சிரிக்கும்
கிருஷ்ணையர் தாத்தா
மருந்து வாசனைகளால்
நினைவுபடுத்தப்படுகிறார்.

அப்பாவுக்கு
குட்டிகுரா பவுடர்,
ஜவ்வாது வாசனைகளோடு
வளைய வருவதில்
அலாதிப் பெருமிதம்.

சின்ன வயசிலேயே
மிலிட்டரி மாமாவுக்கு
வாக்கப்பட்டு
தூர தேசம் போய்விட்ட
அக்காவின் நினைவு
மஞ்சள் வாசனையால்
வீடெங்கும் நிறைந்து கிடக்கிறது.

விதவிதமாய்
வாசனைத் திரவியங்களை
மாற்றிப் பார்த்தும்
உருப்படியான வாசனை
எதிலும் கிடைக்காது
என்பது தம்பியின் அனுபவம்.

இரண்டு தலைமுறைகளுக்கு
ஆக்கிப் போட்டு,
சமையலறையோடே அடங்கிப் போன
அம்மாவை நினைக்கையில்
அடுப்படி வாசனையைத் தவிர
வேறெதுவும் வரவில்லை.

– வெ.அருண் பாரதி

# நான் நானாக

திரும்பிப்பார்க்கிறேன்
எனதாயுளின் வயதின் துணையுடன்
என் உயிருற்பவ நாளின் எல்லையிலிருந்து
நானென்னை

ஓலமிடும் நான்
அங்கிருந்து அலறுவதெனக்கு கேட்கிறது
ஈனமாக வருடம்கடந்து காலம்தின்ற
தொலைவிலெனக்கு

ஆ... என் முதுகில்
எத்தனை ரணங்களும் தடங்களும்
வரிவரியானக்கரிய வீரியவடுக்களும்
எனதாழமான வீரவரலாறுகளும்

அங்கிருந்து
முறையிடும் நான்
பற்கள்கடிக்க வேதனையுடன்
முணுமுணுத்தழுகிறேன் என்னிடம்

ம்... ஓடிவா
புண்ணாலும் வடுவாலும் கற்றுக்கொண்ட நீ
எப்படி நானென்றாகியிருக்கிறேன் என்று

கைவிரல்களின் பெருவிரல் வானம்பார்க்க
விவாதமிழந்த விபரமென
எனதாயுள் முழுவதையும்
விழுங்கிச்செமித்து வெற்றியெனும்
வெறிபெற்றவனாக உரமேறி நிற்கிறேன்
நான்
நானாக என்னிடம்..!

– ஆர். ஜவஹர் பிரேம்குமார்,

# முழு மனிதன்

உஷாதீபன்



அறைக்குள் தன்னை அடைத்துக் கொண்டிருந்தார் விஸ்வேஸ்வரன். இரண்டாம் எண்ணில் வைக்கப்பட்டிருந்த தலைக்கு மேலான காற்றாடி மெல்லிய சத்தத்தோடு, காற்றை வழங்கிக்கொண்டுதான் இருக்கிறேன் என்பதாக அவருக்கு நினைவு படுத்தியது. அதனை மூன்றிலோ அதிகமாக இன்னும் இரண்டு நிலைகளிலோ வைப்பதும் ஏதோ கலவரத்தை உண்டு பண்ணுவது போல் அது வேகமெடுத்து சுழல்வதும் கூட அவரால் சகிக்க முடியாமல் போயிருந்தது. அப்படித் தன்னையறியாமல் என்றேனும் அந்த எண்களில் வைத்து விடும்போது, யாரோ தலையை விரித்துப் போட்டுக் கொண்டு முன்னால் நின்று ஆடுவதுபோல் உணர்ந்து பதறிப்போய் வேகம் குறைத்திருக்கிறார் விஸ்வம். அந்த சத்தம் மன அமைதியைக் குலைப்பதாக உணர்ந்தார்.

ஃபேன் எப்பவும் "ஸ்மைல்டா" சுத்தினாத்தான் சுகமா இருக்கும்... நண்பரொருவர் சொல்வதை நினைத்துக் கொண்டார். ஸ்மைல் என்பது புன்னகை. அதாவது ஒரு சின்ன, உதட்டோரச் சிரிப்பு. ஸ்மைல்டா சுத்தணும் என்றால் சின்னதா, மெதுவா சுத்தணும் என்று ஒரு பொருள் வருகிறதுதானே...! நினைத்து சிரித்துக் கொள்வார்.

சுற்றிலும் எந்தப் பரபரப்பும் இல்லாத ஒரு மயான அமைதியில் அமர்ந்தே... அல்லது ஏதேனும் ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டே நாள் முழுவதுமான பொழுதைத் தள்ளி விட்டு விட வேண்டுமென்பதுதான் அவரது சமீபத்திய பழக்கமாய் இருந்தது. திரைச் சீலைகள் இழுத்து விடப்பட்ட நிலையில் மெல்லிய இருள் படர்ந்திருக்கும் அறையில் தனிமைக்கு மெருகு கூட்டும் அது.

எதிரே அலமாரியில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங்கள் எல்லாமும் அவரை விடாமல் கண்கொண்டு பார்த்துக் கொண்டேயிருந்தன. என்று என்னை எடுத்துப் படிக்கப் போகிறாய் என்ற




அவைகளின் கேள்விகள் அவரை அறைந்து கொண்டேயிருந்தன. நிறங்கள் நாளுக்கு நாள் மங்கிக் கொண்டே வருகின்றனவோ என்று ஒரு கவலையும் இருந்தது. புத்தகங்கள் முழுதும் படிக்கப்படாமல் பழசாகின்றன என்ற வருத்தமிருந்தது. சில்வர் பூச்சி என்று ஒன்று ஓடியது கண்டு பதறிப் போனார். அந்தப் பெயர் கூட நீலா சொல்லித்தான் அவருக்குத் தெரியும். அன்று அத்தனை புத்தகங்களையும் கீழே இறக்கி, தட்டி...கொட்டி....மீண்டும் அடுக்கினார். அப்படி அடுக்குகையில் ஒரு யோசனை வந்தது. எழுத்தாளர் வாரியாக இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திப் பிரித்து அடுக்கி விட்டால் என்ன...? உருப்படியாய் ஒரு வேலை செய்து முடித்ததுபோல் ஆகுமே...! பிறகு டக்...டக்..கென்று ஒரு குறிப்பிட்ட படைப்பாளியின் புத்தகத்தை உடனுக்குடன் உருவிப் படிக்கலாமே...! தேட வேண்டிய அவசியமில்லையே...! மனம் துள்ளல் போட்டது.

நினைத்ததுபோல் செய்ய ஆரம்பித்தார். அறை முழுவதுமாய் தரையில் பிரித்துப் பிரித்து வரிசையாய் வைக்கலானார். அந்த நேரம் பார்த்துத்தான் நீலா கையில் விளக்குமாரோடு வர வேண்டுமா...?. அவளுக்கிருக்கும் கோபத்தைப் பார்த்தால், அறையைப் பெருக்குகிறேன், தூசியைத் தட்டுகிறேன் பேர்வழி என்று போகிற போக்கில் தன்னையும் ரெண்டு போட்டாலும் போச்சு என்பதாய் இருந்தது அந்த ஆவேசம். தரையில் அடுக்கியிருந்த புத்தகங்கள் மேலெல்லாம் பட்டுப் பட்டென்று போட ஆரம்பித்தாள். வந்ததே பார் கோபம் இவருக்கு...!

ஒரு மரியாதை இல்லே...? என்ன நினைச்சிட்டிருக்கே நீ.....புத்தகங்களை சரஸ்வதின்னு சொல்றோம்....சாமி முன்னாடி அடுக்கி வச்சுக் கும்பிடுறோம்...அதப்போய் இப்டிக் கேவலப்படுத்துறியே....இது நியாயமா....?

அதெல்லாம் சரஸ்வதி பூஜைக்கு..... பாடப் புஸ்தகம், இராமாயணம், மகாபாரதம், ஸ்லோகப் புஸ்தகங்கள்னு அடுக்குவாங்க... இதுகளுக்கு என்ன வந்துதாம்.... வெறும் கதைகள்தானே.... விறுவிறுன்னு தூசியைத் தட்டித் துடைச்சு எடுத்து அடுக்குற வழியைப் பாருங்க... தனியாக் கிடந்து கஷ்டப்படுவீங்களேன்னு உதவி செய்ய வந்தா இது வேறயா...?.

ஒவ்வொண்ணா துடைச்சுத் துடைச்சுத்தான் அடுக்க முடியும். மொத்தமாத் தட்ட முடியாது.... தூசி போகாது. அவசரப்பட்டா ஆகாது....

பழைய புத்தகக் கடையில் வாங்கின புத்தகங்களை கீழடுக்குல தனியா வைங்கன்னு ஆயிரம்வாட்டி அடிச்சிண்டேன்... கேட்டாத்தானே? இந்தப் புஸ்தகம் படிக்கிறவங்களே இப்டித்தான்... அடுத்தவங்க பேச்சைக் கேட்குறதில்லை... தன்னிஷ்டத்துக்குத்தான் செய்வாங்க எதையும்... அப்டி ஒரு திமிரு... அதுலேர்ந்துதான் வந்திருக்கும்... எல்லாத்துக்கும் பாச்சா உருண்டை போட்டா மட்டும் போதாதாக்கும்... ஓடோநில் வாங்கி வைக்கணும். அடுக்குக்கு ஒண்ணாவது பிரிச்சு வச்சாகணும்... பை டூ... கெட் ஒன்... போட்டிருக்கான்.... நாலு செட் வாங்குங்க...அப்பத்தான் இந்தப் புத்தகங்களெல்லாம் பிழைக்கும்... ஆயுசுக்கும் படிக்கிறமாதிரி இப்டி வாங்கி வாங்கி அடுக்கிண்டேயிருந்தா....? இதென்ன வருஷாந்திர கொலுவா...? வாயுண்டானா அழும் அத்தனையும்...! ஏதோ சிலதைப் படிச்சிருப்பீங்க...மத்தது அத்தனையும்... அப்டியே வச்சமேனிக்குத் தூங்கிண்டிருக்கு...

என்னத்துக்கு இப்டி பீரோ பீரோவா சேர்க்கணும்....? இதென்ன சொத்தா...?

எத்தனை சுலபமாய்ச் சொல்லி விட்டாள் அவள். சொத்தா? என்று சொத்தையாய் ஒரு கேள்வி கேட்டு விட்டாளே? சொத்துதான் என்று எப்படி அவளுக்கு உணர வைப்பது? இத்தனை வயசுக்கு மேல் அவளின் அவநம்பிக்கைகளைத் தகர்க்க முடியுமா? நான் எத்தனையைப் படித்தேன் என்று இவள் என்ன கண்டாள்? எல்லாம் வெறும் கதையாம்... வாழ்க்கையே இருக்குடி இதுல... நம்ப வாழ்க்கையே இருக்கு..... டி.வி. சீரியலாப் பார்க்குற உனக்கு இதோட அருமை எப்டித் தெரியும்...? அதுல வர்ற பொம்பளைங்க அடிச்சிக்கிற மாதிரி, கர்...புர்ன்னு சீர்ற மாதிரிதான் நீயும் பேசுற....

வெறும் ஏட்டுச் சுரைக்கா.....கறிக்கு உதவப் போகுதா.....யார் யாரோ கற்பனைல இஷ்டத்துக்குப் புருடா விட்டத எங்கிட்டப் பெருமையாப் பேசறீங்களாக்கும்....

அடிப்பாவி....எப்டிச் சொல்லீடீ உனக்குப் புரிய வைக்கிறது....? கண்டமேனிக்குப் பேசாத... நாக்கு அழுகிடுமாக்கும்.... பஸ்ல டிராவல் பண்றபோது போற போக்குல படிச்சிட்டுத் தூக்கிப் போடுறதில்லடீ இது.... அத்தனையும் இந்த மதிப்பு மிக்க வாழ்க்கையோட ஆழமான அனுபவங்களாக்கும்... அப்டி இந்த வாழ்க்கையை அனுபவிச்சு முடிச்சவங்க... கரை கண்டவங்க...வாழ்க்கையைக் கொண்டாடினவங்க... எழுதிவச்ச பொக்கிஷங்களாக்கும்... இந்த உலகத்துல உள்ள வெவ்வேறு விதமான மக்களோட வாழ்க்கைப் பாடங்களாக்கும்...

நமக்கும்தானே நிறைய அனுபவங்கள் இருக்கு... நம்ம வாழ்க்கைல நாம பார்க்க மாட்டமா.....? என்னமோ பெரிசாச் சொல்றீங்களே....?-

அது அப்டியில்லடி... வாழ்க்கையோட எல்கை எல்லாருக்கும் விரிஞ்சி இருக்கிறதில்லை... உனக்கும் எனக்கும் பத்து கி.மீ. சுற்றளவுதான்... பாத்த மனுஷங்களையே பார்த்து, பேசினதையே பேசி, வாங்கினதையே வாங்கி, தின்னதையே தின்னு... அது போதுமா....? இல்ல போதுமாங்கிறேன்.... உலகத்தைப் படிக்கணும்டி... ...மனுஷாளைப் படிக்கணும்... கையடக்கமா, உட்கார்ந்த இடத்துலயே அந்த அனுபவங்களைத் தர்றதும், நம்மை முதிர்ச்சியடைய வைக்கிறதும் இந்தப் பொக்கிஷங்கள்தான்... உனக்கெங்கே தெரியப் போகுது....என்னவோ சொன்னானாம்... கழுதைக்குத் தெரியுமா...

என்ன சொன்னீங்க... என்ன சொன்னீங்க.....? இது வேறே பேச்சா....? எனக்கு வேணும்தான்... பட்டென்று துடைப்பத்தைப் போட்டவள்தான்... போய் விட்டாள்.

படிச்சு முடிச்சதெல்லாம் யாருக்காச்சும் கொடுத்திற வேண்டிதானே... எடமாவது மிஞ்சுமில்ல....? என்றாள் ஒருநாள். அன்றும் அந்தக் கற்பூர வாசனைதான் இவருக்கு நினைவுக்கு வந்தது. வாயை அடக்கிக் கொண்டார். சிலதுகளை ஆயுசுக்கும் திருத்தவே முடியாது....

அந்தப் புத்தகங்களையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார். படிச்சிட்டா கொடுத்திரணுமாம்... எப்டி கத....? படிச்சிட்டா...?. முடிஞ்சி போயிடுமா.....? அத்தோட அவ்வளவுதானா....? அதுக்கா உன்னை இப்டி வாங்கி வச்சிருக்கேன்...? எனக்கு எப்பல்லாம் திடீர் திடீர்னு தோணுதோ அப்பல்லாம் உன்னை எடுத்து எடுத்துப் படிப்பேனாக்கும்... அப்டி ஒண்ணும் எங்கிட்டேயிருந்து ஈஸியா நீ தப்பிச்சிட முடியாது.... -புத்தகங்களோடு ஆதர்ஸமாய் அடிக்கடி பேசுவது அவர் வழக்கம். அவைகளுக்காகவே தன்னைத் தனிமைப் படுத்திக் கொண்டிருப்பதாய் உணர்ந்தார்.

ஆனால் உண்மையில் அதுவா....? அதுவும்தான் என்று வேண்டுமானால் சொல்லலாம். ஆனால் அதுதான் முழுக் காரணம் என்று ஒரு வலிய தோற்றத்தை ஏற்படுத்தவும், அதனை நிறுவவும் சமீப நாட்களாய், தான் முயன்று கொண்டிருக்கிறோம் என்றே அவரது மனசாட்சி சொல்லியது.

உண்மையில் அவர் நினைத்தது வேறு. அதற்குத்தான் அவரது மனம் முழுமையாக விழைந்தது. அதில்தான் பரிபூர்ண நிம்மதியை, ஒரு விடுபட்ட நிலையை, தான் எய்த முடியும் என்பதே அவரது எண்ணமாக இருந்தது. ஆனால் வீட்டிலிருப்பவர்கள் விட்டால்தானே....! தனிமை....அதுதான் அவரது விருப்பம். ஊரிலே தனிமையில் இருத்தல்....தனிமையை விரும்பாதவன், தனிமையில் இருக்கத் தெரியாதவன் ஒரு எழுத்தாளனாக இருக்க முடியாது. நகுலனின் வாக்கு இவைகள்.

உனக்கு என்னப்பா வேணும்.... அமைதியா உட்கார்ந்து படிக்கணும்... படிச்சிட்டேயிருக்கணும்...எழுதணும்.... அவ்வளவுதானே....நீபாட்டுக்கு அதைச் செய்யி...யார் உன்னை என்ன சொல்லப் போறாங்க... சாப்பிடற நேரத்துக்கு சாப்பிடு.... எதுவும் முடிலயா... படுத்துத் தூங்கு...ஆனா என்கூடத்தான் நீங்க இருக்கணும்...என்று சொன்ன சந்துரு.....திடீரென்று அந்தப் புத்தக ரேக்கோடு வந்து நின்று விட்டானே...! அட... என் மன ஓட்டங்கள் இந்தப் பொடியனுக்கு எப்படித் தெரிந்தது?

ஹ்ஹா...!!!..சூப்பர்.....எப்படா அளந்தே இந்த இடத்தை....? என் ரூம்ல இருக்கிற இந்தச் சிறிய இடத்துக்குத் தகுந்த மாதிரி கரெக்டாப் பொருந்துதே இந்த ஷெல்ஃப்...? ஆறு அடுக்கு...ஆறரை அடி உயரம்..... மாய்ந்து மாய்ந்து அடுக்கினாலும்...அத்தனை புத்தகங்களும் கொள்ளுமே.....! இங்கே நான் வச்சிருக்கிறது ரெண்டு அடுக்குதானே தேறும்...மிச்சம்....?

லைப்ரரி மாதிரி அடுக்கணும்னு நீதானேப்பா சொன்னே...நினைச்ச நேரம் நினைச்ச புத்தகத்தை அப்பத்தான் உருவி எடுத்துப் படிக்க வசதின்னு சொன்னியா இல்லியா.... அதான் இந்த ஏற்பாடு.....

வாயடைத்துப் போனார் விஸ்வம். அதுநாள் வரை சுவரோடு சுவராக இருந்த ஒரு அடைத்த ஷெல்ப்பில் புத்தகங்களை இடம் போதாமல் செருகியும், அடைத்தும் வைத்திருந்தார். அத்தோடு இவர் மனதும் அடைந்து போயிருந்தது. வந்திருக்கும் பையன் வீட்டில் எது எதற்கென்றுதான் வாயைத் திறப்பது? எதற்கெல்லாம்தான் அவனைச் சிரமப் படுத்துவது?

அப்பா...லேப் டாப் வாங்கியாச்சு.... ஆன்ட்ராய்டு ஃபோன் வாங்கிக் கொடுத்துட்டேன்....நெட் போட்டுக் கொடுத்துட்டேன்...உனக்குன்னு ப்ளாக் ஓப்பன் பண்ணியாச்சு.....ஃபேஸ் புக் திறந்தாச்சு..... யூ ட்யூப் இருக்கு....ஒரு நாளைக்கு ரெண்டு ஜி.பி. தாராளமா யூஸ் பண்ணலாம்... ....நாள் முழுக்க இலக்கிய நிகழ்வுகள், உபன்யாசங்கள் கேட்கலாம்...இதெல்லாம் போக 45 இஞ்ச் மெகா டி.வி வாங்கி மாட்டியாச்சு... உன் ஆளுமைக்கு.....இன்னும் ஏதாச்சும் மிச்சமிருந்தாச் சொல்லு....வாங்கிடுவோம்.... நல்லா அனுபவிச்சிட்டு ஹாய்யா...சந்தோஷமா இரு....

எல்லாம் சரிதான். ஆனாலும் இவருக்கு என்னவோ ஒன்று உதைத்தது. ஊரில் இருக்கும் தன் சொந்த வீட்டில் இருப்பது போலான சுதந்திரத்தை இங்கு எதிர்பார்க்க முடியுமா? இருப்பதற்குள், அடுக்ககக் குடியிருப்பில், அட்ஜஸ்ட் பண்ணிக் கொள்ள வேண்டியதுதான். எப்போதும் கைவசம் கொண்டு வந்து வைத்திருக்கும் கொஞ்சப் புத்தகங்களையே... சரி...இவைகளைப் படித்து முடித்து பிறகு பார்ப்போம்....என்று பொறுமை காத்தார். ஆனால் இலக்கியம் படிப்பது என்பதும் சுவைப்பது என்பதும்...அந்த வகையினதா? அப்படியா கட்டி நிறுத்த முடியும்? படித்து விட்டு, படித்து விட்டு ஒதுக்கி விடும் வகை மாதிரியா? தோன்றும் போதெல்லாம், தோன்றிய எழுத்தாளர்களையெல்லாம் கைவசம் ரெடி என்று எடுத்து எடுத்துப் படித்துச் சுவைப்பதுதானே ஒரு சிறந்த வாசிப்பாளனுக்கு, ஒரு படைப்பாளிக்கு இருக்கும் இலக்கணம்?

அவன் அம்மாவோடு, தான் அடிக்கடி வாதிப்பதையெல்லாம் இந்தப் பயல் கேட்டுக் கொண்டிருந்திருப்பானோ? அப்பாவின் உள்ளார்ந்த ஆசை இவைகள் என்று உணர்ந்திருப்பானோ? தான் செய்யும் ஒரே செலவு இந்தப் புத்தகங்கள் வாங்குவதுதான். அதைக் கூட நீலா அவ்வப்போது கடிந்து கொண்டிருப்பாள். ஆனால் இவன் ஒரு நாளும் ஒரு முறையும்கூட ஒன்றும் சொன்னதில்லையே...!

ஏம்மா...அப்பா என்ன சினிமா... டிராமான்னா சுத்தறார்...? இல்ல வெளில போய் எங்கயாச்சும் ஆசையாச் சாப்டுட்டு வர்றாரா? அவருக்குன்னு ஒரு தண்டச் செலவு உண்டா?.....செலவே கிடையாது... அப்புறமில்ல தண்டச் செலவுங்கிறதுக்கு...! ஏதோ சர்வீஸ்ல இருக்கிற காலத்துலேர்ந்து

இந்த ஒரு ஆசைதான்...புஸ்தகம் படிக்கிறது....படிச்சிட்டுப் போகட்டுமே.... அதுனால உனக்கென்ன நஷ்டம்....அதுவும் மாசா மாசமா புஸ்தகம் வாங்குறாரு... வருஷங்கூடி...புத்தகக் கண்காட்சி போகைல ஆயிரம் ரெண்டாயிரத்துக்கு வாங்கிட்டு வர்றாரு.....அது ஒரு தப்பா....அதுதாம்மா அப்பாவை ஆரோக்கியமா வச்சிருக்கு... அதப் புரிஞ்சிக்கோ ....இந்த ஒண்ணையும் நீ கட் ஷார்ட் பண்ணினேன்னு வச்சிக்கோ... அப்புறம் அப்பா படுக்கைல விழுந்தாலும் ஆச்சரியப்படுறதுக்கில்லே.....வாழ்க்கைல ஒவ்வொரு மனுஷனும் இப்டி ஏதாச்சும் ஒண்ணை விடாமத் துரத்திக்கிட்டேயிருக்கான்... ஓடிட்டேயிருக்கான்...அப்பத்தான் இந்த வாழ்க்கையும் ஸ்வாரஸ்யமா இருக்கும்.... மனுஷனும் வயசானாலும் புத்துணர்ச்சியா ஃபீல் பண்ணுவான்...அதனால இதையெல்லாம் எடுத்துப் பிடிச்சு சதா சொல்றத விடு....அப்புறம் அப்பா மனசு ரொம்ப சங்கடப்படும்.... நான் ஊர்ல போய் இருந்துக்கிறேன்னு சொன்னாலும் சொல்லிப்புடுவாரு...ஏற்கனவே அந்த எண்ணம் இருக்கும் போலிருக்கு.... கிளம்பிட்டார்னா ஆளப் பிடிக்க முடியாது... அப்புறம் உனக்குத்தான் சங்கடம்...அவசர ஒத்தாசைக்கு உனக்கு அவர் ஒருத்தர்தான். நாங்க ரெண்டு பேரும் ஆபீஸ் போயிருக்கைல தனியாக் கிடப்பியா? உடம்புக்கு என்னமாவது பண்ணித்துன்னா? கவனம்.....

என்னமாய் பொறுப்பாய்ப் பேசுகிறான்... இந்த அளவுக்கான பொறுப்புணர்ச்சி இந்த வயதிலே இவனுக்கு எப்படி வந்தது? இவன் வயசில் தன்னிடம் கூட இது இல்லையே.....? விஸ்வேஸ்வரனுக்கு மனசெல்லாம் நிரம்பிப் போயிற்று.

ஆனா அன்னிக்கு கடைசியா ஒண்ணு சொன்னானே...அதக் கேட்டியா...? இப்பொழுது மனசாட்சி சொல்லிற்று. ரொம்ப நெருக்கினா நான் ஊர்ல போய் இருந்துக்கிறேன்னு சொன்னாலும் போச்சு என்றானே.....அந்த மனநிலை இப்போது தனக்கு வந்து விட்டதே.... இதை எப்படிச் சொல்வது?

எதிரே அலமாரியில் அடுக்கப்பட்டிருந்த புத்தகங்களையே பார்த்துக் கொண்டு யோசனையில் இருந்தார் விஸ்வம். புத்தகங்களாய்ப் படித்துப் படித்து ஒரு மாதிரியான மோன நிலைக்கு அல்லது ஞான நிலைக்குத் தன் மனம் இடம் பெயர்ந்து விட்டதோ? ஏனிப்படி சமீப நாட்களாய் மனசு தனிமையை நாடித் தவிக்கிறது? ஏகாந்தமாய் ஊரில் உள்ள அந்தப் பெரிய வீட்டில் ஒண்டிக் கட்டையாய் அமர்ந்து சிந்தித்துக் கொண்டிருப்பதில் ஆழ்ந்து போகிறதே மனம்? இங்கு கிடைக்காத, இல்லாத ஏதோ ஒன்று அங்கிருப்பதாய் மனம் கிடந்து அவாவுகிறதே....! எதையாவது காரணம் சொல்லிக் கொண்டு தப்பித்துக் கொள்ள வேண்டும் என்று ஏன் மனம் இத்தனை வேகம் கொள்கிறது?

இந்த பார்...கல்யாணம் பண்ணிக் கொடுத்தாச்சா....கடமை முடிஞ்சிது அத்தோட... அப்புறம் அவுங்கவுங்கதான் அவங்களோட ஃபேமிலியைப் பார்த்துக்கணும்....

ஒரு நாள் மனைவி நீலாவிடம் இப்படித்தான் அடி போட்டார் விஸ்வம். ஆரம்பிக்கும்போதே இன்றைக்கு சண்டைதான் என்கிற நினைப்பிலேயேதான் துவக்கினார். ரெண்டுல ஒண்ணு பார்த்திருவோம்ங்கிற கதைதான்....

என்ன இப்டிச் சொல்றீங்க....அவனுக்கு இருபத்தியேழுதான் ஆகுது....அந்தப் பொண்ணுக்கு இருபத்தி நாலு.....ரெண்டும் சின்னப் பிள்ளைங்க....அதுகளுக்கு ஆபீஸ் போக, வர இதுக்குத்தான் நேரம் சரியா இருக்கு....போறாங்க...வந்து சாப்பிடுறாங்க... தூங்குறாங்க...திரும்ப எழுந்து குளிச்சிட்டு ஆபீஸ் கிளம்பிடுறாங்க...போதாக் குறைக்கு இந்த ஐ.டி. கம்பெனிகளோட லட்சணமும் அந்த அளவுலதான் இருக்கு....கசக்கிப் பிழிஞ்சிடறாங்க....அதுனால சனி, ஞாயிறுன்னு ஜாலியா வெளில கிளம்பிடுறாங்க....கொஞ்ச நாளைக்குத்தான் சந்தோஷமா, ஹாய்யா... இருக்கட்டுமே....என்ன கெட்டுப் போகுது.... நாமதான் இருக்கமே.....செய்திட்டுப் போறோம்....நம்ம பிள்ளைகளுக்குத்தானே செய்றோம்...அவன் சந்தோஷமா இருக்கணும்னுதானே இந்தச் சென்னைல வீடு வாங்கிட்டு வந்தோம்....கல்யாணமும் ஆயிடுச்சு.....மீதி நாட்களை அவனுக்காகக் கழிச்சிட்டுப் போவோமே....ஊர்ல போய் ஒத்தக்கட்டையா இருந்திட்டு, நீங்களும் நானும் மூஞ்சிய மூஞ்சியப் பார்த்திட்டு....வெட்டியாக் கழிக்கணுமா...இத்தனை வருஷமா பார்த்தது போறாதா? .நல்லா யோசிங்க....இத்தனை



நாளும் நாம ரெண்டு பேரும் சண்டையும் சச்சரவுமா இருந்தது பத்தாதா? இப்போ பிள்ளைகள் கண்காண இருக்கிறதுதானே நிம்மதி, திருப்தி, சந்தோஷம்.....-நீலா அடுக்கியதைப் பார்த்தால் வாயே திறக்க முடியாதுதான். ஆனாலும் இவரும் இவர் பங்குக்குக் கொஞ்சம் சொல்லத்தான் செய்தார். எனக்கும் சில பாய்ன்ட்கள் இருக்கத்தான் இருக்கு.... என்று ஆரம்பித்தார்.

நானெல்லாம் கல்யாணம் பண்ணினவுடனே தனியாத்தானே போய் இருந்தேன். ரெண்டு மாசத்துல நீ டிரான்ஸ்பர் வாங்கிட்டு மதுரை வந்துடலயா...ஆரம்பத்துலர்ந்து தனிக் குடித்தனம்தானே.....! நாம நடத்துலயா குடும்பம்....? அதுபோல இவங்களும் இருந்திட்டுப் போறாங்க... அதான் கை நிறையச் சம்பளம் அள்ளிக் கொடுக்கிறானே....வச்சிட்டு செலவழிக்க வேண்டிதானே.....செலவு பண்ணி, செலவு பண்ணி அவங்களுக்கும் சேமிப்புங்கிற பொறுப்பு வர வேண்டாமா....நாம கூடவே இருந்து முட்டுக் கொடுத்திட்டேயிருந்தா.... குடும்ப வரவு செலவு தெரிய வேண்டாமா... பழக வேணாமா....? விடாமல் இவரும் அடுக்கத்தான் செய்தார். ஆனால் பலமாய் ஒரு கொக்கியைப் போட்டாள் நீலா. அதில்தான் அதிர்ந்து போனார் இவர்.

நீங்களும் நானும் குடித்தனம் ஆரம்பிக்கிற போது உங்களுக்கு முப்பத்தஞ்சு....எனக்கு முப்பத்தி ரெண்டு....அதுவும் இதுவும் ஒண்ணா.....குருவி தலைல பனங்காய வச்ச மாதிரி இப்பவே அவங்க எல்லாத்தையும் சுமக்கணுமா.....? இந்தப் பேச்சை இத்தோட விடுங்க......ரொம்பப் பிடிவாதம் பிடிச்சீங்கன்னா அப்புறம் நீங்கதான் தனியாப் போக வேண்டிர்க்கும்.....ஆம்மா......!

அடிப் பாவி மவளே...! என்னாடி இப்டிச் சொல்றே? போற போக்கைப் பார்த்தா என்னையே கழட்டி விட்ருவ போலிருக்கு....? என்னவோ ஒரு தயக்கம் என்று நினைத்தோமே அது இதுதானோ? எனக்குன்னு ஒரு பொண்ணு இல்லாமப் போச்சு....இருந்திருந்தா அது கேட்கும் இப்ப... அப்பாவ இப்டிச் சொல்றியேன்னு....பரவால்ல இருக்கட்டும்.... வந்திருக்கிற என் மருமகளயே என் பொண்ணா நினைச்சிட்டுப் போறேன்....அது எனக்கு சப்போர்ட் பண்ணிப் பேசாதா? நீதான் இத்தனை நாளா என்னை முறைச்சே.... இனிமே அப்டி முறைச்சுப் பாரு...பார்ப்போம்.... நம்ப வீட்டுக்கு வந்த அந்தப் பொண்ணு முன்னாடி நீ என்னை முறைச்சேன்னா உனக்குத்தான் அசிங்கமாக்கும்... ஓஹோ.... அப்டியா சமாச்சாரம்னு அது நம்ப பையனை மதிக்காமக் கிளம்பிடும்...அதுக்கு எடம் கொடுத்துடாதே.....ஜாக்கிரதை.......

யப்பா....யப்பா....யப்பா.....சரிய்ய்யான வாய்....உங்களுக்கு.....காது வரைக்கும் நீள்றது......எதுக்கோ எதையெல்லாமோ சம்பந்தப்படுத்திப் பேசுறதே உங்களுக்கு வழக்கமாப் போச்சு....காது புளிச்சுப் போச்சு....

இத்தன வருஷம் கழிச்சு இப்பத்தான் தெரிஞ்சிதாக்கும்.... அன்று அத்தோடு பேச்சு முடிந்தது. அதற்குப் பின், சரி...பார்ப்போம்.... என்று விட்டு விட்டார் விஸ்வம். ஆனாலும் இன்று மீண்டும் தலை தூக்குகிறதே அந்த எண்ணம்.....!!

குழம்பிப் போய் அமர்ந்திருந்த விஸ்வேஸ்வரன் அறையின் வாசலில் நிழலாடுவதை உணர்ந்தார்.

என்னப்பா.....என்றவாறே உள்ளே நுழைந்த சந்துருவைக் கண்டு நீ இன்னும் ஆபீஸ் கிளம்பலயா....? என்றார்.

அவரின் கேள்வியில் சற்றே அதிர்ந்த சந்துரு கேட்டான். “என்னப்பா...இப்டிக் கேட்குற....மதியத்துக்கு மேலதானே எப்பவும் புறப்படுவேன்....”

ஓ.கே....ஓ.கே....என்ற விஸ்வம் மீண்டும் அமைதியானார்.

என்னாச்சுப்பா....மூட் அவுட்டாகிப் போய் உட்கார்ந்திருக்காப்ல இருக்கு....ஊர் ஞாபகம் வந்திருச்சா....? வேணும்னா அங்கே ஒரு சிசிடிவி காமரா வச்சு, இங்க சிஸ்டத்துல நெட்டோட கனைக்ட் பண்ணிடுவோம்.....

எதுக்குடா அப்டிச் சொல்றே....?

இல்லே....வீட்டை யாரும் தூக்கிட்டுப் போகாம இருக்கணுமில்ல.....?

அடி...செருப்பால....பேச்சைப் பாரு.....நான் அதுக்கா மூட் அவுட்டாகி உட்கார்ந்திருக்கேன்.... எதக் கொண்டு வந்தோம்...கொண்டு போறதுக்கு....?

அப்ப வீட்டை எவனும் பெயர்த்து எடுத்திட்டுப் போனாப் பரவால்லேங்கிறே....?

அந்த வீட்ல தனிமைல இருக்கிறதே ஒரு பெரிய தியானம் மாதிரிடா....உனக்கென்ன தெரியும் அதப்பத்தி....? அத்தனைக்கும் ஆகி வந்த வீடாக்கும் அது.....

அதான் தெரியுதே....நீ வழக்கத்துக்கு மாறா....கலகலப்பில்லாம....ரொம்ப நேரம் அமைதியாவும், தனிமையாவும் இருக்கிறதப் பார்த்து.....தீவிர நெனப்பு வந்திடுச்சு.... அய்யாவுக்கு....

அப்டியெல்லாம் இல்லடா கண்ணா..... என்னென்னவோ இந்த மனசுக்குத் தோணுது..... வேறொண்ணுமில்லே.....டாக்கார்டை அறுத்துக்கிட்ட மாதிரி தாவிப் பறக்குது இந்த மனசு....

அப்டி என்னதான் தோணுது......பழைய காதலியப் பத்தியா....? இல்ல....உங்க ஆபீஸ்ல யாரையோ அடிக்கடி சொல்வியே.... ரொம்ப அழகா இருப்பாங்கன்னு....அவங்கள நினைச்சிட்டியா.......அவங்கள்லாம் இப்பக் கெழவியாயிருப்பாங்கப்பா....

டே...டேய்...குசும்புடா உனக்கு.....இந்த வயசுல எனக்கென்னடா வந்தது? என்னவோ தெரில....மனசு அப்படியொரு தனிமையை விரும்புது.........அதான்.....

ஏம்ப்பா.....மதுரைல போய் நீ தனியா இருந்தேன்னா...உடம்புக்கு ஏதாச்சும் செய்ததுன்னா....யார்ப்பா பார்க்கிறது? கதவைப் பூட்டிட்டு ராத்திரி வீட்டுக்குள்ள தனியாப் படுத்திருக்கிற போது, திடீர்னு நெஞ்சு வலிச்சிதுன்னு வச்சிக்க....ஒரு பேச்சுக்கு சொல்றேன்....நீயா எந்திரிச்சு வீட்டைப் பூட்டிட்டு ஓட முடியுமா? ஒத்தக்கட்டையா தைரியமாப் போயி ஆஸ்பத்திரில படுத்துக்குவியா...? யாரைன்னு கூப்பிடுவே? வெறுமேயே காய்ச்சல்னு படுத்துக்கிறே.... ஒரு சுடு தண்ணி வச்சுக் கொடுக்கிறதுங்கூட நீயாப் பண்ணிக்குவியா....? இங்க நாங்க இருக்கிறபோது, அறுபத்தஞ்சு வயசுக்கு மேலே அதெல்லாம் சரின்னு உனக்குத் தோணுதா......? பேசாம இருப்பா.... இங்கேயே....ரொம்ப போரடிக்குதா சொல்லு... டாக்ஸி வச்சிட்டு வெளில கூட்டிட்டுப் போறேன்...நாள் முழுக்க நல்லா சுத்துவோம்... வீட்டுல சமைக்க வேண்டாம்......வெளிலயே சாப்பிடுவோம்....ரெப்ஃபெரஷ் பண்ணிக்கோ.... சந்தோஷமா இரு....எதுக்கு எதையாச்சும் நினைச்சிட்டு அவஸ்தைப் படுறே....மனசப் போட்டு உழட்டிக்காதே.....மார்கழிக் கச்சேரிகள் நடக்குது...டிக்கெட் வாங்கித் தர்றேன்..... திருப்தியாப் போய் கேட்டுட்டு வா....டாக்சில போ...டாக்சிலயே வா....நா...பணம் தர்றேன்.... உன் பென்ஷன் காசைத் தொடாதே..... அம்மாவையும் கூட்டிட்டுப் போ.....சரியா..... சந்தோஷமா இருப்பமே.....!

பையனின் வார்த்தைகளில் மெய் குளிர்ந்து போனார் விஸ்வேஸ்வரன். ஆனாலும் அவனிடம் சொல்ல முடியாத இன்னொன்று அவர் மனதை உறுத்திக் கொண்டேதான் இருந்தது. மலையாய் நிற்கும் அதனைச் சொல்லவும் படு தயக்கமாய் இருந்தது. அவனே மூட் அவுட்டாகிப் போனால்...என்று ஒரு பயம்...

நினைச்ச போது நினைச்ச புஸ்தகத்தை எடுத்துப் படிக்க முடிலயே.....இங்க இருக்கிற சிலது போக மீதி நூத்துக்கணக்கான முக்கியமான புஸ்தகமெல்லாம் அங்க ஊர்லல்ல கெடக்கு......அந்தப் புத்தகங்கள் அத்தனையும் என் கண்காண இருந்தாத்தானே நான் முழு மனுஷன்.....விரும்பின கணத்துல விரும்புற எழுத்தாளரோட புத்தகத்தை எடுத்துப் படிக்க முடியாத வாழ்க்கை ஒரு வாழ்க்கையா? அப்டி ஒரு நாள் விடிஞ்சென்ன போயென்ன? ஆயிரந்தான் ஆனாலும் அந்தப் புத்தகங்கள் அத்தனையும் என் கூடவே இருக்கிறது போல வருமா? என் உயிரப் பிரிஞ்சிருக்கிறமாதிரி இருக்கே எனக்கு...இதை எப்படிச் சொல்வேன் என் மகனிடம்...என் மன ஆதங்கத்தை சரியான கோணத்துல புரிஞ்சிப்பானா?

இன்னும் எம்புட்டுக் குப்பையைத்தான் சேர்க்கணும்....? அதுகளக் கண்டாலே தலைமூர்ச்சைக்கு வருது எனக்கு... நீலாவின் கேள்விகள் இவரின் மனதைப் போட்டு அறுத்தெடுக்கிறது......! ? தவிர்க்க முடியாமல் விஸ்வத்தின் கண்களில் நீர் கசிகிறது.

பையனோடு கூடிய, இதமான, இன்னொரு வலுவான, சீரிய சந்தர்ப்பத்துக்காகக் காத்திருக்கலானார் விஸ்வேஸ்வரன். ●

# பூஜ்யங்கள்

எத்தனை எத்தனை
மனங்களின் அவநம்பிக்கைகள்..
நாம் கடந்து செல்லும் பாதையெல்லாம்
கொட்டிக்கிடக்கும் ஏமாற்றங்கள்!
முதுகில் ஏறி பயணித்துகொண்டு
பல விந்தை காட்டுமென நம்பும்
மனதின் மூடநம்பிக்கைகள்!
ஒவ்வொரு ஐந்தாண்டும்
கற்றுத்தரும் அனுபவங்களை
அடகு வைத்தே
பெறும் இலவசங்கள்!
அந்நிய மோகத்தில் தன்னை
இழந்தபடியே பயணிக்கும்
அவசர வாழ்க்கை!
செயற்கை மயத்தில்
மயக்கத்தில்
வாழ்க்கையில் வீழ்ந்து
கொண்டிருப்பதறியாமல்
நகரும் நகர வாழ்க்கை!
சாதிகளும் சடங்குகளும்
சமத்துவம் பேசியபடி
விவேகத்திற்கு தடைகளாய்
முற்றுப்புள்ளிகளாய்..
மதங்களின் போதனைகள்
சொல்லாத மதவெறியினை கற்று
சில தருணங்களில்
மதங்கொண்ட யானைகளாய்!
அதிக வட்டியின் ஆசையில்
தன் பணமிழந்து தவிக்கும்
நடுத்தர மக்களும்..
எல்லோரையும் நம்பிவிட்டு
எல்லாவற்றையும் நம்பிவிட்டு
இறுதியில் எதற்கும்
எவருக்கும் பயனற்று நிற்கும்
எல்லோரும் பூஜ்யங்களே!

**– ம.சக்திவேலாயுதம் நெருப்புவிழிகள்**

# உணர்ச்சிகளின் தோல்வி

அன்பு தொடங்கி அநேகத்திற்கு
அடிமையானவன் இவனென அறிந்து,
என்னைத் தன் வசப்படுத்திவிட
சமயம் பார்த்துக் காத்திருந்த
உணர்ச்சிகளெல்லாம் தோற்றுப்போய்
தன் தோழனாக்கிக்கொண்டிருக்கிறது.
அதனின்றிய இருத்தலில்
நான் நானாகப் பார்க்கப்படவும்,
விளிக்கப்படவும் மாட்டேன் என்பதுணர்ந்து
அவ்வப்போது உணர்ச்சிகளை
என் வசப்படுத்திக் கொள்வேனேயன்றி
எப்போதும் உணர்ச்சிகளுக்கு நான்
வசப்பட்டு விடுவதில்லை.

**– கவி வளநாடன்.**

ஜவ்வாது முஸ்தபா



# ஒத்தை மரம்

நான் இருக்கும் வீட்டுக்கு பக்கத்தில்தான் காளியண்ணனின் வீடு. அவர் இறந்த செய்தி தெரு முழுவதும் பரவி ஒருவருக்கு பின் ஒருவர் வந்து எப்படி? என்னாச்சென்று? விசாரித்தபடி இருந்தாலும், ஓணம் பண்டிகை சீஸன் வியாபாரத்திற்கு கேரளா போக ஆட்களை ஒருங்கிணைப்பு செய்து உறுதி படுத்திக் கொண்டு நான் படுக்க தாமதமாகிப் போனதால், நல்ல தூக்கத்திலிருந்த என்னை உடம்பு மேல் தண்ணீர் ஊற்றாத குறையாய் மனைவி எழுப்பி விசயத்தைச் சொன்ன போது, தூக்கக் கலக்கத்திலும் உடம்புக்குள் இரத்தம் உறைந்து போனது. மனதுக்குள் சற்று பாதிப்புக் குறைய ஒரு சிகரெட் எடுத்து பற்ற வைத்துக் கொண்டேன். அவரை சந்தித்த காலத்திலிருந்து நேற்று இறுதியாய் சந்தித்து பேசியது வரை அவரைப் பற்றிய சிந்தனைகள் என்னுள் தானாக வந்தன.

சொத்து இருந்தால் பக்கத்திலிருக்கணும், சொத்து இல்லாவிட்டால் சொந்தத்தை விட்டு தூர இருக்கணும் என்று சொல்வதைப் போல நானும் சொந்த ஊரை விட்டு, உறவுகளை தவிர்த்து அவர் வீட்டுக்கு இரண்டு வீடு தள்ளி குடி வந்து சிறிது காலமே ஆகி இருந்தாலும், நானே அவரைப் பார்த்து பேசி அறிமுகமான நாளிலிருந்து நல்ல விருந்தோம்பல் எங்கள் நட்புக்குள். என் குடும்பத்திற்கு அவரொரு புளியமரம். அந்த புளிய மரத்தின் கிளைகளில் சுற்றி இருக்கும் கொடிகள் நாங்கள். யார் இட்ட தர்மமோ உதவிக்கு உதவியாகி ஒரு கொடியணைப்பு தடமாக பாசமான இறுக்கத்தில் ஒரே எண்ணத்தில் பயணிப்பது போல் ஏற்பட்டுப் போனதில் எனக்குள் எப்போதும் ஒரு வியப்புப் போர்வைப் போர்த்தி இருக்கும். நான் வியாபாரத்திற்காக வெளியூர் செல்லும் சமயங்களில் அவர் தான் என் மனைவிக்கும், குழந்தைக்கும் ஒரு தகப்பனாக காவல் இருப்பார்.

அவ்வப்போது சொல்வார் "தான் காற்று இல்லாத இடத்தில் வாழ்வதாக"

அவர் எதற்காக இந்த வார்த்தையை சொல்கிறார் என்பது எனக்கு தெரியும். மனைவி தவறிப் போனதையும், மகன் அருள் தூரமாகப் போனதையும் நினைத்து ஒரு விரக்தியில் பேசுகிறாரென்று. பின் தானாக, மனைவியை உயிரென்பார், மகனை உள்ளமென்பார் அவரின் மனஉளச்சலை உள் வாங்கிக் கொண்டு. ஆறுதலாகப் பேசி, அவர் மனம் தெளிவாகட்டுமென்று எம் மகளை அவரிடம் சற்று நேரம் விளையாட கொடுத்து விட்டு நகர்ந்து விடுவேன்.

பிறப்பும் இறப்பும் வாழ்க்கை நீதியென்றாலும், பிறப்பு போலவே இறப்பும் பதற்றத்துக்குரிய விசயமாகிறது. இறப்புத் தள்ளிப் போகலாமே தவிர தவிர்க்க இயலாதொன்று. ஒரு புள்ளியிலிருந்து ஆரம்பித்து மறு புள்ளிவரை நேர்க் கோட்டில் அமைந்தவை தான் பிறப்பும் இறப்பும். நல்ல பிறப்பாக இருக்க வேண்டுமென்று எல்லாத் தெய்வத்தையும் துணைக்கழைக்கும் நாம், அதே தெய்வத்தை தனக்கு நல்ல இறப்பாக இருக்க வேண்டுமென்றோ அல்லது சீக்கிரம் இறக்க வேண்டுமென்றோ மனப் பூர்வமாய் எண்ணுவதில்லை.

நாங்கள் அந்த ஊருக்கு வரும் முன்னரே அவர் மனைவி தனலட்சுமி ஊர் பொதுக் கிணற்றில் தண்ணீர் எடுக்கப் போய், பக்கத்திலுள்ளவர்களிடம் பேசிக் கொண்டே வாளியைப் பிடிக்கும் லாவகம் விட்டுப் போக, மேலே வந்த வாளி, படு வேகத்தில் கீழே போக, கால் பக்கத்தில் இருந்த கயிறு அவரை கிணற்றுக்குள் இழுத்துப் போட்ட அதிர்ச்சியில் உயிர் போனதாகச் சொன்னார். வீட்டில் அசம்பாவிதம் நடந்த பின்னால் தானாக உண்டாகும் ஒரு வெறுமையும், வீட்டினுள் எங்கு பார்த்தாலும் மனைவியின் நிழல் தெரிவது போல ஒரு சலனமும் தாங்க முடியாமல் அவர் தவித்தாலும், மகனுக்கு ஒரு கல்யாணம் முடித்தால் ஓரளவு எல்லாம் நாட்பட சரியாகும் என்று நினைத்தபடி மகனுக்குப் பெண் பார்க்க ஆரம்பித்த போது தான் மகன் சொன்னானாம், "அப்பா, சொந்தத்தில எந்தப் பொண்ணையும் பார்க்காதீங்க, வம்சாவளி நோயும், பட்டப்பேரும் தொடர்ந்து சாவரவரைக்கும் கூடவே இருக்கும். பிரத்தியிலயோ, காதலிச்சோ கல்யாணம் முடித்தால் இந்த பிரச்சனை இருக்காதப்பா " என்றானாம்.

அவன் எண்ணம் போலவே சொந்தத்தில் அவன் வயதிற்கேற்றார் போல் பொண்ணுகள் இல்லாதது அவன் அதிர்ஷ்டம்தான். அவன் தானாக ஒரு பெண்ணை வீட்டுக்கு அழைத்து வராமல் இருந்ததும் குடும்பத்திற்கும் சிறப்பென்று நினைத்த படி, அவசரமாய் பிரத்தியில் அவனுக்கு பெண் பார்த்து கல்யாணம் முடிந்ததில் அவன் திருப்திப்பட்டுக் கொண்டாலும், அவருக்கு மனசு நிறைவு இல்லாமல் இருந்ததாகச் சொன்னார்.

"ஏன்டா, பிரத்தியில கல்யாணம் முடிச்சா நோய் நொடி வராதுனு எந்த சாஸ்திரத்தில எழுதி வெச்சு இருக்குடா?" என்று அவனிடம் அவர் கேட்டதற்கு அவனிடமிருந்து பதில் ஏதுமில்லாமல் ஒரு உள்ளர்த்தம் கொண்ட சிரிப்பை உதிர்த்து விட்டுச் சொன்னானாம், "சொந்தத்தில் கல்யாணம் முடித்தால் வீட்டு நிலையறிந்து வரதட்சனை தருவாங்கெ, அதிகம் எதிர்பார்க்க முடியாது கொடுப்பதை வாங்கிக் கட்டிக்கனும், அதே மாதிரி பெண்களின் வயது பற்றியும், அழகு பற்றியும் ஏதும் குறை சொல்ல முடியாது, காதலித்து கல்யாணம் முடித்தாலும் அவுங்கத் தருவதைத் தான் சத்தமில்லாமெ வாங்கனும், எதுக்கு இந்த வம்புனுதா பொண்ணைப் பிரத்தியில் பார்க்கச் சொன்னேன்" என்று மகன் சொன்ன போது மயக்கம் வராதக் குறையாக நின்று, அவன் மனசுக்குள் பேராசையும், ஒரு கணக்கும் இருப்பதை நினைத்து வரும் காலப் போக்கில் எது எதுக்கெல்லாம் கணக்குப் பார்ப்பானோ என்று அச்சப்பட்டுக் கொண்டாராம், பன்னிரெண்டாம் வகுப்பு மட்டுமே படித்து கணினியில் கணக்கு வழக்குகளைக் கற்றுக் கொண்டு நீர் இரைக்கும் மோட்டார்கடையில் கணக்காளராக இருப்பதையெல்லாம் பெண் கொடுப்பவர்கள் ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளாமல் மாமியார் இல்லை, கூட பொறந்தவர்களும் யாருமில்லை. அதனால், எந்த பிரச்சினை இல்லாமல் தம் பிள்ளை நல்லா இருப்பாள் என்ற கோணத்திலேயே அவர்கள் பெண் கொடுத்து இருப்பதையும், தன் ஒரே மகன் ஆசைப்படி எல்லாம்

நல்லபடியாக நடக்கட்டுமென்றே தானும் இருந்ததாகவும் தழும்பும் நீர்க் குடம் போல் அடிக்கடிச் சொல்வார்.

இப்படி தன் மகனைப் பற்றி விசயங்களைச் சுவைபடச் சொன்னாலும், தன்னைத் தனியே விட்டு விட்டு அதே நீர் இரைக்கும் மோட்டார்க் கடை முதலாளி ஆந்திராவில் இன்னொரு கடை துவக்க இருப்பதையறிந்து, மனைவியின் நச்சரிப்பில் அந்த புதுக்கடைக்கு தன்னை ஒரு பங்குதாரராக இணைத்துக் கொண்டு மனைவியை அழைத்துக் கொண்டு மகன் ஆந்திராவுக்கே போனது தான், அருவையிக்கு வந்த பயிர் மழையில் நனைந்து அழுகிப் போனது போல் எம் மனசு ஆகிப் போச்சு என்பார். மகன் ஆந்திராவுக்கு போனபின் ஆரம்பத்தில் மாதம் மாதம் பணம் அனுப்பியவன், இந்த ஆறுமாத காலமாக மாதம் விட்டு மாதம் குறைந்த பணம் அனுப்புவதாகவும் ஏன் என்று கேட்டால் இப்போ ஆந்திராவ ரெண்டாப் பிரிக்கப் போற பிரச்சனையால வியாபாரம் குறைவென்றும், அனுப்புவதை மட்டும் வைத்து செலவு செய்ய வேண்டுமென்றும் மகன் சொன்னதாகவும், இடையில் ஊர் வந்த சமயங்களில் முகம் கொடுத்து பேசாமல், எந்த செலவுக்கானாலும் யாரிடமும் கை நீட்டக் கூடாதென்று கூறிச் சென்றதாகவும் சொன்னார், தன் மகனைப் பற்றி எல்லா விசயங்களையும் ஒன்னு விடாமல் சொல்வது எங்ககிட்ட மட்டும் தான், உறவுக்காரர்களிடம் மகனைப் பற்றி பெருமையாகப் பேசிக் கொண்டு இருப்பார் .

என்னை அவரின் மூத்த மகனாக நினைப்பதாகச் சொல்வார். இருந்தாலும், அவரை அண்ணே என்று தான் அழைப்பேன். இந்த ஒருவாரமாய் வீட்டுக்கு சரியாக வருவதில்லை, ஊர்ச் சாவடியிலேயே நேரத்தைப் போக்கி நேரம் கழித்து வீட்டுக்கு வருவதை வழக்கமாக்கிக் கொண்டு இருந்தார். என்ன விசயமென்று கேட்டால், ஏதோவொரு சாக்குச் சொல்லி "நா யென்ன காவல் தெய்வமாட" என்பார். மனசு சரியில்லாமல் இருப்பவரை தொந்தரவு பண்ணக் கூடாதென்று ஒதுங்கி விடுவேன். இருந்தாலும், வெளியூருக்கு வியாபாரத்திற்குப் போவதைச் சொல்லா விட்டால் வருத்தப்படுவார் என்பதற்காக நேற்று மாலை அவரை சந்திக்கச் சென்றபோது, வீட்டின் முன் தாழ்வாரத்தை பிடித்துக் கொண்டு குழந்தைகள் தொங்குவது போல் இரண்டு கையையும் உயர்த்தி தாழ்வாரத்தை கெட்டியாகப் பிடித்த படி நின்று இருந்தார், கண்கள் ஓரத்தில் நீர்கட்டி கன்னத்தில் வழிந்து இருந்தது. நான் அருகில் வருவதை அவர் பார்த்தாலும் "வாடா" யென்று கூடச் சொல்லாமல் மூச்சையடக்கி நின்று கொண்டு, யோகாசனம் செய்வது போல் நின்று இருந்தார்.

"என்னெண்ணெ, என்னாச்சு ஒரு மாதிரியா இருக்கீங்கெ" என்றேன்.

என் கேள்விக்கு எதும் பதில் தராமல் முன் போலவே மௌனமாக இருந்தார்.

"உடம்பு சரியில்லையாண்ணெ" என்றேன் மீண்டும்.

"ஆமா" என்று வாய் திறந்து பேசாமல், மெதுவாகத் தலையாட்டினார்.

"ஆஸ்பத்திரிக்கு போயிட்டு வரலாம் வாங்க"

"வேண்டாம்" என்பதற்காக இடது வலதுமாய் வேகமாய் தலையாட்டினார்.

அவரின் உடம்புக்குள் என்ன பிரச்சனையென்று அவராக சொல்லட்டுமென்று அவரின் கால்மாட்டை ஒட்டி இருந்த திண்ணையில் அமர்ந்து அவரைப் பார்த்தபடி இருந்தேன். சற்று நேரம் தாழ்வாரத்தைப் பிடித்தபடி இருந்தவர், அந்த பிடியை தளர்த்தி விட்டு வேகமாக, தானாக வராத இருமலை வலிய வரவழைத்து சத்தமாக இருமத் தொடங்கினார். அவரின் செய்கைகள் எனக்கு விசித்திரமாக இருந்தாலும், ஏதோ அவரின் உடம்புக் கோளாறை அவரே ஒரு வைத்தியராகி சரி செய்ய முயன்று கொண்டு இருக்கிறார் என்று மட்டும் புரிந்தது.

சற்று நேரம் அப்படியே இருமிக் கொண்டு இருந்தவர், ஜன்னல் பக்கத்தில் வைத்து இருந்த நீலகிரித் தைலத்தை நெஞ்சுப் பகுதியில் தேய்த்தபடி என் பக்கத்திலமர்ந்தார்.

"நெஞ்சு வலிக்குதாண்ணே"

"ஆமாடா, அதுக்கென்னக் குறைச்சலு?"

"சரிண்ணே, வாங்க ஆஸ்பத்திரிக்கு போயிட்டு வரலாம்"

"அதெல்லாம் ஒண்ணும் வேணாம்டா,

**திடீரென்று இப்படியொரு வார்த்தையை அவரிடமிருந்து வருமென்று நான் எதிர்பார்க்கவேயில்லை. நேராக அவர் கண்ணைப் பார்த்தேன். முன் போலவே அவர் கண்கலங்கி இருந்தது.**

இன்னைக்கு நேத்தா எனக்கு நெஞ்சுவலி? அவெ போனப்பவே அது வந்துருச்சு, இப்போ மகனும் தூரமாயிட்டான். நிம்மதியான தூக்கமில்லெ, மனசு நிறையற மாதிரி எந்த விசயமுமில்லே, நெஞ்சுவலி வராமயா இருக்கும்? அது எப்படி வந்துச்சோ, அது அப்படியேப் போயிரும் என்று பேசிக் கொண்டு இருந்த போது பழுத்த இலையொன்று, காற்று இழுப்புக்கு இடம் கொடுத்து தன் பலத்தை இழந்த இலை எங்கள் முன் விழுந்து, மனிதன் தடுக்கி விழுந்து உருண்டு எழுந்து நிற்பது போல நின்றது.அதைக் கவனித்த காளியண்ணன், "பிறப்பும், இறப்பும் வாழ்க்கை நீதியென்றாலும் பிறப்பு எவ்வளவு சுலபமில்லையோ இறப்பும் அவ்வளவு சுலபமில்லைடா" என்றார் அந்த பழுத்த இலையைப் பார்த்துக் கொண்டே.

"மத்தியானம் என்ன சாப்பிட்டீங்க" என்றேன் பேச்சை மாற்றுவதற்காக.

"காலையில டீ பன்னு, மத்தியானம் பழைய கஞ்சி"

"வீட்ல கறிக் குழம்புணே கூட சோறும் கொண்டு வர்றேன் சாப்புடுங்கெ"

"அதெல்லாம் வேணாம்டா, எது சாப்பிட்டாலும் நெஞ்சு எரியுது, கீழே இறங்காம எல்லாம் மேலேயே நிக்குது" என்றார்.

"எதும் ஒண்ணுமாகாது, செரிமானத்திற்கு மாத்திரையும், சோறும் கொண்டு வார்றேன் சாப்புடுங்கணே'' என்று சொல்லி விட்டு அவர் பதிலுக்கு எதிர் பாராமல் வீட்டுக்கு ஓடிப் போய் எல்லாம் எடுத்தாந்து கூட டீயும் கொண்டு வந்து கொடுத்தேன். டீயை மட்டும் மெதுவாய் குடித்து விட்டு மத்ததை அப்படியே பக்கத்தில் வைத்து விட்டார். ஏதோ யோசித்துக் கொண்டே மீண்டும் இருமிக் கொண்டே பேசினார்.

"அருள் நேத்தே அவெ மாமனார் வீட்டுக்கு வந்துட்டாண்டா " என்றார்.

"என்ன விசயம்ணே? உங்களப் பார்க்கவல்லையா?"

" அவெ வந்தது எனக்கேத் தெரியாது, ஏதோ அவுங்க மாமனார் வீட்ல குல விஷேசமாம், எனக்கு கூட யாரும் சொல்லியனுப்புல, அவெ வந்தது, அவுங்க வீட்ல விஷேசம் இருப்பது எல்லாம் விசயமும் தம்பிதுரைதா சாவடியிலச் சொன்னான்"

"அங்க ஏதாவது முக்கியமான வேலை இருக்கும்ணே, அதைய முடுச்சுட்டு உங்கள பார்க்க வருவாணே,கவலப் படாதீங்கெ"

"அட நீ ஒண்ணு, அவெனப் பத்தி உனக்குத் தெரியாதா? இங்க வருவான் என்னெப் பார்க்க இல்லெடா, இந்த வீட்டெப் பார்க்க, ஏன்னா அவனுக்குனு இருக்கறது இந்த ஒரு ஆஸ்தி தானே, இந்த சொத்தும் இல்லையினா, என்னைய எப்போவோ கைகழுவி இருப்பான், இந்த வீட்டெ பாத்துக்கதா என்னை இத்தன நாளா கொஞ்சம் மேச்சுட்டு இருக்கான்டா"

"சரிணே, அருள் எப்படியோ இருந்துட்டுப் போறான். இப்போ உங்க நெஞ்சு நெரிச்சலுக்கு ஆஸ்பத்திரிக்குப் போய் டாக்டரெ பார்த்துட்டு வரலாம் வாங்கெ"

"அதெல்லாம் வேணாம்டா, எல்லா எரிச்சலும் ஒரு நேரம் சரியாப் போயிரும்"

"ஓணம் பண்டிகை வருதில்லையா? கேரளாவுக்குப் போறேன். வர்றதற்கு ஒரு பத்து நாள் ஆயிடும்"

"வழக்கமா நீ வியாபாரத்திற்கு போற விசயம்தானேடா, புதுசா எதுக்குச் சொல்ற, போ."

"சரிணே, போறேன். ஆளுகளப் போய் ஒண்ணாக்கணும், மாத்திரைய சாப்பிட்டு சோறு சாப்புடுங்கெ. நெஞ்சுல எரிச்சல் வராது, ராத்திரிக்கு வந்து பார்க்கறேன்" என்று நான் சொல்லிக் கொண்டு கிளம்பிய போது, கையைப் பிடித்துக் கொண்டு, தீயில் பச்சை இலை கருகுவது போல ஒரு படபடத்தக் குரலில், "பத்து நாள் ரொம்பத் தூரம்டா,வியபாரத்தெ முடிச்சுட்டு சீக்கிரமா வா, உன் குடும்பத்தெப் பார்க்க" என்றார்.

திடீரென்று இப்படியொரு வார்த்தையை அவரிடமிருந்து வருமென்று நான் எதிர்பார்க்கவேயில்லை. நேராக அவர் கண்ணைப் பார்த்தேன். முன் போலவே அவர் கண்கலங்கி இருந்தது.

“என்னாச்சுணே” என்றேன்.

“ஒண்ணுமில்லடா, பத்து நாள் போறயா, அதெ மனசுக்குள்ள சின்னக் கவல, போ... போயிட்டு வா” என்றார்.

அவர் வீட்டை விட்டு வெளியேறும் போது கடைசியாக அவர் பேசிய வார்த்தைகள் மனசுக்குள் ரணமாக சுட்டது, எதுக்காக இந்த வார்த்தையை சொன்னாரென்று.

கையில் வைத்திருந்த சிகரெட் புகைந்து இறுதியாகி விரலை, அவர் வார்த்தை போல சுட்ட போதுதான் எனக்கு சுரணை வந்தது. அரட்டல் புரட்டலாக வீட்டை விட்டு வெளியேறி வேகமாக காளியண்ணன் வீட்டுக்கு வந்த போது, தெருவில் இருந்தவர்களோடு அவரின் உறவுக்காரர்களும் இருந்தார்கள். கொஞ்சம் நேரத்திற்கு முன்னாடி தான் அருள் வந்திருப்பான் போல. வேகமாய் போய் அவன் கண்ணில் படுவது போல் நின்று கொண்டேன். நேத்து நா கொடுத்த கறி சாப்பாட்டை சாப்பிட்டு கொஞ்சம் மீதி வைத்து இருந்தார் பாத்திரத்தில். வாய்வுக்குண்டான மாத்திரையும், நெஞ்செரிச்சலுக்கு நான் கொடுத்த மாத்திரைகளையும் அவர் போடவே இல்லை. அது அப்படியே சுவர் ஓரமாக இருந்தது. நெஞ்செரிச்சலும், நெஞ்சுவலியும் மீண்டும் அவருக்கு வந்து இருக்கும் போல. நேற்று நான் பார்த்த மாதிரி தாழ்வாரத்தை இறுக பிடித்துக் கொண்டு மேலும், கீழுமாய் பெரு மூச்சு வாங்கி ஒரு உடற்பயிற்சி போல செய்து கொண்டு இருந்திருப்பார் நெஞ்செரிச்சல் போக,

அப்புறம் வேகமாய் இருமி இருப்பார் என்று எனக்குள் நான் நினைத்த நேரத்தில், அவர் பெரிய சத்தத்துடன் இருமியது பக்கத்து வீட்டுக்கு கேட்டதாக பக்கத்தில் நின்றவர்கள் பேசிக் கொண்ட போது நான் யூகித்தது சரியென்று நினைத்துக் கொண்டேன். அருள் வேகமாய் வந்து மீதமிருந்த அந்த கறிக்குழம்புப் பாத்திரத்தை எடுத்துப் பார்த்து விட்டு “இது யார் கொடுத்தது” என்பது போல் அங்கிருந்தவர்களைப் பார்த்து விட்டு இறுதியாய் என்னைப் பார்த்து எதுவும் பேசாமல் பாத்திரத்தை தூர எறிந்தான். எப்போதும், காளியண்ணன் யாரிடமாவது கொடுக்கல் வாங்கல் வைத்து இருந்தால் ஒரு நோட்டில் எழுதி வைப்பார். அந்த நோட்டு அவர் படுக்கைப் பக்கத்தில் தான் எப்போதும் இருக்கும், அந்த நோட்டை எடுத்து பிரித்துப் பார்த்தான், அதில் எழுதி இருந்த அத்தனை எழுத்துக்களும் அடித்து இருந்தது, இனி கொடுக்கல், வாங்கல் எதுவுமில்லை என்பது போல.

ஒரு பெருச் சாலையில் மரம் சாய்ந்து விட்டால் அவசர அவசரமாய் அப்புறப்படுத்து போல் காளியண்ணனுக்கு செய்ய வேண்டிய காரியங்களை செய்து, அவர் மேல் வெள்ளைப் போர்வை போர்த்தி படுக்க வைத்தார்கள். காற்றுக்கும், மழைக்கும் ஈடு கொடுக்க முடியாமல் ஆடி அசைந்து வேரோடு சரியும் ஒத்த மரம்,

துணைக்கு சற்று சாய்ந்து கொள்ள விளைந்த மரங்கள் பக்கத்தில் எதுவுமின்றி அனாதையாய் விழும் போது எவ்வளவு தூரம் குலுங்கி, குலுங்கி உள்ளுக்குள் அழுதிருக்கும் என்பதை நினைக்கும் போது தழும்பியக் குடம் உடைந்து அழ ஆரம்பித்தது என்னுள். தினமும் மனசார வாய் விட்டு பேசும் காளியண்ணன், இன்னும் மிச்சமிருக்கிறது உன்னிடம் பேச என்பது போல் அவர் வாய் திறந்தே இருப்பதைக் கண்டு இவ்வளவு நேரம் உள்ளுக்குள்ளேயே அழுது கொண்டு இருந்த நான் இப்போது வெளிப் படையாக அழ ஆரம்பித்து விட்டேன். மனம் பொறுக்காமல், நான் சத்தமாய் காளியண்ணனின் பிரிவைச் சொல்லி அழ, எதையும் கரைக்கும் திரவம் ஊற்றினால் கல்லும் சுக்கலாகி விடுவது போல திடீரென்று அருள் வந்து என்னைத் தாங்கிப் பிடித்து அவனும் அழ ஆரம்பித்தான்.

“அப்பா, என்னைய மன்னிச்சுருப்பா” என்று கத்தினான் அருள்.

வேர் பிடிப்பற்று விழுந்த மரத்தின் கீழ் பகுதியில், ஏதோ சொல்ல நினைத்து வார்த்தை வராமல் வாய் பிளந்து இருப்பதைப் போல ஒரு பெரிய துளையின் ஈடாக காளியண்ணனின் திறந்திருந்த வாய் அருளின் மன்னிப்புக்கு ஏதோ பதில் சொல்வது போல் இருந்தது. •



# பெயருக்குப் பின்னால்

அலுவலகத்திற்கு
வந்தவரிடம்
பெயரென்ன என்றதும்
சங்கரன் என்றார்...
சங்கரனா...?
வந்தவர் கொஞ்சம்
வயது முதிர்ந்த
பழங்காலத்து ஆள்
வேறொன்னும் சொல்லலையே,
பிள்ளையா... முதலியாரா...
செட்டியாரா... ஐயரா... தேவரா...
நெல்லைக்காரர்களென்றாலே
நெறைய சங்கரன்களிருப்பார்கள்
எப்படி அடையாளப்படுத்துவது...
நெல்லை சங்கரனை
சங்கரன் சங்கையாவாகவும்
இருக்கலாம்...

எப்படியோ,
அவரை அழைப்பதற்கு
பின்னும் அடையாள
அங்கீகரமாய்
எழுதப்பட்டது
ஆதார் எண்...
பான் எண்...
எண்ணங்களை விட
எண்களுக்கு தானே மதிப்பு...
பலவிதமான
யோசனைகளுடன்
"ஷங்கர்" என்று
என் மகனை அழைத்தவாறே
வீட்டிற்குள்
நுழைந்துக் கொண்டிருந்தேன்.

**– செ.ச.பிரபு, நெல்லை நகர்.**

வ.ஹரிஹரன்



# தொ.மு.சி. ரகுநாதன்



'சமுதாய நோக்கில் ஒரு படைப்பாளனின் படைப்பை ஆராய்வதற்கு அவரது வாழ்க்கை வரலாறு துணை நிற்கும்' என்ற சாலை இளந்திரையன் கூற்றின்படி ஒருவருடைய படைப்பை ஆராயுமுன் அவருடைய வாழ்க்கை வரலாற்றை அறிந்து கொள்வது அவசியம்.

தண்பொருநை ஆற்றங்கரை பல இலக்கியச் செல்வர்களைத் தமிழுலகிற்கு ஈந்துள்ளது. ஆழ்வார்திருநகரியில் நம்மாழ்வார் தோன்றி பக்தி மணம் பரப்பினார். திருவைகுண்டத்தில் குமரகுருபரர் தோன்றிக் கவிதைகள் பல யாத்தார். சமயம் பரப்பும் நோக்கில் தோன்றிய அன்றைய படைப்பாளிகளின் மத்தியில் சமுதாயத்தை உற்றுநோக்கி விழிப்புணர்ச்சியைத் தோற்றுவிக்கத் தாமிரபரணி ஆற்றங்கரையில் திருநெல்வேலி நகரில் 1923-ஆம் ஆண்டு தோன்றியவர் தொண்டைமான் முத்தையா சிதம்பர ரகுநாதன் ஆவார்.

இலக்கியமும் அரசியலும் இரண்டறக் கலந்த நெல்லைச்சீமையின் தலைநகரான திருநெல்வேலியில் பல தலைமுறைகளாகப் பெருமையோடும் புகழோடும் வாழ்ந்த குடும்பங்களில் ஒன்று ரகுநாதன் குடும்பம். தொண்டைமான் பரம்பரையைச் சேர்ந்த குடும்பம் அது.

தொ.மு.சி.யின் குடும்பம் மூன்று தலைமுறைகளாகச் சிறப்புற்று விளங்கிய குடும்பம். அவருடைய பாட்டனார் சிதம்பரத் தொண்டைமான் சிறந்த தமிழறிஞர். ஸ்ரீரங்கநாதர் அம்மானைப் பாடல்கள் எழுதியுள்ளார். சிதம்பரத் தொண்டைமானின் சித்தப்பா அருணாச்சல தொண்டைமான் முருகதாச சுவாமிகள் என்னும் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளின் முதல் சீடராக வாழ்ந்தவர். வண்ணங்களும் சந்தங்களும் பாடுவதில் தன் குருநாதரைப் போலவே வல்லவராகத் திகழ்ந்தவர். அவர் 'செந்திலம்பதி இரட்டை' 'செந்தில் வண்ணப் பதிகம்' என்னும் நூல்களைப் பாடியிருக்கிறார்.

சிதம்பர தொண்டைமான் மகனாக தொ.மு.சி. ரகுநாதன் 1923 அக்டோபர் 20-ல் பிறந்தார். அது விஜயதசமி நாள். தாத்தா பெயர் சிதம்பரம். புதுக்கோட்டையில் விஜயதசமியின் போது தசராவிழா நடக்கும். ராஜாவைப் பார்ப்பதற்கு நெல்லையிலுள்ள தொண்டைமான் ஜாதி ஆட்களோடு தொண்டைமான் முத்தையா புதுக்கோட்டை போயிருந்தார். விழா வேளையில் தனக்கு மகன் பிறந்த செய்தி கேட்ட அவர் அப்போதைய புதுக்கோட்டை ராஜா விஜயரகுநாதன் பெயரையும் தம் தந்தை சிதம்பரம் பெயரையும் சேர்த்து "சிதம்பர ரகுநாதன்" என்று மகனுக்குப் பெயர் சூட்டினார். கல்லூரிப் படிப்பு வரை அவர் பெயர் டி.எம். சிதம்பரம்.

ஆரம்பக் கல்வியை ஷாப்டர் பள்ளியில் (அப்போது அதன் பெயர் சர்ச் மிஷன் உயர்நிலைப் பள்ளி) படித்தார். சிறப்பாகப் படித்ததால் முதல் வகுப்பு முடித்ததும் அவர் மூன்றாம் வகுப்பில் சேர்க்கப்பட்டார். அவருடைய ஆங்கில ஆசிரியர் பென்ஆல்பர்ட். ஆங்கில இலக்கியத்தில் தொ.மு.சி.க்கு ருசியூட்டினார். ரகுநாதன் பெற்ற ஆங்கில அறிவு அவருடைய காலம் முழுவதும் நன்கு பயன்பட்டது. 1936-இல் அவர் உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது தந்தையார் காலமானார்.

1939-இல் நெல்லை இந்துக் கல்லூரியில் இண்டர்மீடியட் படிப்பு. வரலாற்றுப் பிரிவில் சேர்ந்து படித்தார். வரலாற்று ஆசிரியர் கே.எஸ். சோணாசலம், கார்க்கியின் 'தாய்' நாவலை இவருக்குப் படிக்கக் கொடுத்தார். கல்லூரி நூலகர் காந்திமதிநாதபிள்ளை தொ.மு.சி.க்குப் புத்தகங்கள் எடுத்துப் படிப்பதில் உதவினார். அருணாசலக் கவுண்டர் என்பார் தொ.மு. சிக்கு பாரதிதாசன் கவிதைகளை வகுப்புகளில் சொல்லி ஈடுபாடு ஏற்படுத்தியவர். "பாரதிதாசன் தமிழ்நாட்டின் ஷெல்லி" என்ற கட்டுரையை 'அணிகலன்' இதழில் வெளியிட்டார். கல்லூரி வாழ்க்கை நின்றுபோனது.



படிப்பு நின்றுபோனதால் வேலை தேடவேண்டியிருந்தது. தினமணியில் வேலைக்குச் சேர்ந்தார்.

*1944-1945*-தினமணி பிரசுரம் - உதவி ஆசிரியர், சென்னை.

*1946-1947*-முல்லை - ஆசிரியர், சென்னை.

*1948-1952*-சக்தி, துணை ஆசிரியர், சென்னை.

*1954-1962* - சாந்தி, ஆசிரியர், திருநெல்வேலி.

*1967* முதல் - சோவியத்நாடு ஆசிரியர், சென்னை.

"முல்லை"யில் ஆசிரியராகப் பணியாற்றிய காலத்தில் தொ.மு.சி. நாடகங்கள் எழுதத் தொடங்கினார்.

புரட்சியாளர் கே.பாலதண்டாயுதம் தலைமறைவாக இருந்து நெல்லையில் கம்யூனிஸ்ட் கட்சிப்பணி செய்து கொண்டிருந்தார். இவர் தத்துவத்திலும் இலக்கியத்திலும் ஆழ்ந்த ஈடுபாடுடையவர். பாலனோடு கலந்துரையாடினார். தொ.மு.சி மனதில் படிப்படியாக இடதுசாரிச்சார்பு வலுப்பெற்றது. நெல்லையில் "கலைஞர் கழகம்" என்ற இலக்கிய அமைப்பை 1947 ஜூலை இறுதியில் தொடங்கினார். தலைவர் தொ.மு.சி. செயலராக, நெல்லை தாம்கோல் வங்கியில் பணியாற்றிக்கொண்டிருந்த தி.க.சிவசங்கரன், நா.வானமாமலை, என். டி.வானமாமலை, சீனிவாசன், வக்கீல் பாளை. சண்முகம், அண்ணாச்சி சண்முகம்பிள்ளை, கணபதியப்பன், ஜெகந்நாதன் ஆகியோர் இதரப் பொறுப்பாளர்கள். 1942 டிசம்பரில் கலைஞர் கழகத்தில் ஜீவாவைப் பேச அழைத்தனர். இதே ஆண்டில் 25-வது வயதில் 'இலக்கிய விமர்சனம்' என்ற நூலை எழுதி வெளியிட்டார். இலக்கிய விமர்சன வரிசையில் முதல்நூல் அது.

*1948 - ஜுலை 24*-இல் ரகுநாதனுக்குத் திருமணம். துணைவியார் பெயர் ரஞ்சிதம். இவர்களுக்குப் பிறந்தவர்கள், மூன்று பெண்களும் ஓர் ஆணும் ஆவர். அரீந்திரநாத் சட்டோபாத்தியாயா என்ற கவிஞரின் பெயரை முன்வைத்து அரீந்திரன் என்று மகனுக்குப் பெயர் வைத்தார். பிள்ளைகளை நன்கு படிக்க வைத்து ஆளாக்கினார். புதுமைப்பித்தனோடு இரண்டறக் கலந்தவர், *1951*-இல் 'புதுமைப் பித்தன் வரலாறு' என்ற நூலை எழுதினார்.

குடும்பத்தில் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடி காரணமாக தொ.மு.சி. நிரந்தர வருமானம் தரும் தொழில் தேட வேண்டியதாயிற்று. சென்னையிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த 'சோவியத் நாடு' என்ற இதழ்ப்பணியில் சேர்ந்தார். கலை இலக்கியப் பெருமன்றத் தலைவர் பணியைத் துறந்தார்.

சின்ன வயதில் ரகுநானுக்கு வீட்டில் ஒரு செல்லப் பெயருண்டு. அந்தப் பெயர் 'வணங்காமுடி'. அந்தக் குணம் இப்போதும் தம்மிடம் இருக்கிறது என்பார் தொ.மு. சி. அவர் புத்தகம் படிக்கும்போது உரக்கப் படிக்க மாட்டார். தந்தையார் 'உரக்கப்படி' என்பாராம். தந்தையாரிடம் 'சத்தம் போட்டுப் படிக்க எனக்குப் பிடிக்கவில்லை. மனதில் பதியவில்லை" என்பாராம் தொ.மு. சி. 'அப்படியென்றால், ஒரு பாட்டைப்படி உனக்கு 5 நிமிடம் தருகிறேன். மனதிற்குள் படித்து ஒப்பிக்க வேண்டும்;' என்பார் தந்தை. மனத்திற்குள் படித்து ஒப்பித்தார். அதிலிருந்து மகனிடம் அவ்வாறு சொல்வதை விட்டு விட்டார் தந்தை. இந்த மாதிரிக் குணம் இருப்பதால் தான் அவருக்கு "வணங்காமுடி" என்று பெயர்.

தொ.மு.சி.யின் பன்முகப் படைப்பாற்றலில்

நாவல்தளமும் ஒன்று. இவர் எழுதிய நான்கு நாவல்கள் பேசப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| புயல் | 1945 |
| முதலிரவு | 1949 |
| கன்னிகா | 1950 |
| பஞ்சும் பசியும் | 1953 |

தமிழ்இலக்கிய உலகில் நாவலாசிரியர் என முதலில் அங்கீகரிக்கப்பட்டவர் ரகுநாதன். 'முதலிரவு' என்ற நாவல் 1949-ல் வெளிவந்தது. அக்காலத்தில் கன்னட எழுத்தாளரான காண்டேகரின் செல்வாக்கு தமிழகத்தில் உச்சத்தில் இருந்தது. கன்னடத்தில் வெளிவரும் முன்பே நாவலின் மொழிபெயர்ப்பு தமிழில் வெளிவந்துவிடும் என்று சொல்லும் அளவுக்கு அவற்றின் செல்வாக்கு இருந்தது. ஆண், பெண் பிரச்சனைகளை மையமாக வைத்து எழுதிய முக்கியமான எழுத்தாளர் அவர். இலைமறை காயாகச் சித்தரிப்பார். காண்டேகரின் கருகிய மொட்டு இதற்கொரு சிறந்த உதாரணம். இந்தப் பூடக முறையை ரகுநாதனால் சகித்துக் கொள்ள இயலவில்லை. 'எழுதவேண்டுமென்று நினைத்து விட்டால் தெளிவாக எழுதிவிட வேண்டியது தானே' என்பது அவர்நிலை. காண்டேகரின் கருகிய மொட்டுக்குப் பதிலாக அவர் எழுதியதான் 'முதலிரவு' நாவல்.

அன்றைய நெல்லை மாவட்டத்தில் விவசாயத்திற்கு அடுத்தபடியாகப் பெருந்தொழிலாக விளங்குவது கைத்தறி நெசவு. அரசின் கையாலாகாத்தனத்தால், நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருந்த மக்கள் கடும் வறுமையால் பாதிக்கப்பட்டிருந்த காலம் அது. பஞ்சமும் பசியும் மக்களை வறுத்தெடுத்துக் கொண்டிருந்தன. ஆயிரக்கணக்கான மனிதர்கள் கஞ்சிக்கு விதியின்றிச் செத்துக் கொண்டிருந்தார்கள். குடிதண்ணீருக்கும் கூட பஞ்சம் ஏற்பட்டிருந்தது. தெருமுனைகள் தோறும் அரசு திறந்திருந்த கஞ்சித் தொட்டிகளைச் சுற்றி ஏழைஎளிய மக்கள் ஈ எறும்புகளாக மொய்த்துக் கிடந்தார்கள்.

இச்சூழலை மையப்படுத்தி, தெருவோரத்தில் அம்மணமாகக் கிடந்த ஒரு ஏழைநெசவாளியை மையமாக வைத்து 'நியூசன்ஸ் கேஸ்' என்னும் கதையை எழுதினார் ரகுநாதன்.

மக்கள் திரண்டு போராடும் வர்க்கப் போராட்டங்களை மையப் பொருளாக்கியது 'பஞ்சும் பசியும்' நாவல். சோசலிச எதார்த்தவாத இலக்கியப் போக்கைத் தன் 'பஞ்சும் பசியும்' நாவல் மூலம் தொடங்கி வைத்தவர். தமிழகத்தில் பரவலாக விவாதிக்கப்பட்ட நாவலில் ஒன்று 'பஞ்சும் பசியும்'. இன்றைய வாசகர்களுக்கு மட்டுமல்ல அன்றைய வாசகர்களுக்கும் அந்த நாவல் மீது வைக்க நிறைய விமர்சனங்கள் இருந்தன.

தொ.மு.சி. புதுமைப்பித்தனின் நண்பர். 1939-ல் சிறுகதைகள் எழுதியுள்ளார்.1949-ல் தான் இவருடைய முதல் சிறுகதைத் தொகுதி 'நீயும் நானும்' தேவகோட்டையைச் சேர்ந்த உண்மை பிரசுரத்தில் வெளியிடப் பெற்றது. 'உப்பில்லாத சமுதாயம்', 'கூண்டுக்கிளி', 'சேற்றில்மலர்ந்த செந்தாமரை' முதலிய கதைகளோடு 'நீயும்நானும்' கதையும் அதில் இடம் பெற்றது.

'பாரதி காலமும் கருத்தும்' என்ற நூலை தொ.மு.சி ரகுநாதனின், முப்பதாண்டு கால உழைப்பு' என்பார் பொன்னீலன். 1982-ல் பாரதி நூற்றாண்டு விழாவையொட்டி இந்நூலை வெளியிட்டார். இந்த ஆய்வுநூல் 1983-ல் 'இலக்கியச்சிந்தனை' பரிசையும், 1984-ல் அவருக்கு 'சாகித்ய அகாதமி' விருதையும் பெற்றுத் தந்தது. தமிழகத்தில் ஒரு இடதுசாரி இலக்கிய வாதிக்கு முதன்முதலாக சாகித்ய அகாதமி விருது வழங்கப்பட்டது அப்போதுதான்.

தமிழ் இலக்கியஉலகில் தோன்றிய முதல் காப்பியம் சிலப்பதிகாரம். 'நாடகக் காப்பியம்' என்றும் 'முத்தமிழ்க் காப்பியம்' என்றும், 'தேசியக் காப்பியம்' என்றும் தமிழுலகம் சிலப்பதிகாரத்தைச் சிறப்பிக்கின்றது. 'சிலம்பு' என்று சுருங்கச் சொல்லப்படுவது உண்டு. 'நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் என்றோர் மணியாரம் படைத்த தமிழ்நாடு' என்று பாரதியார் போற்றியுள்ளார். 'இளங்கோ அடிகள் யார்? என்று வினா எழுப்பி அவ் வினாவையே நூற்பொருளாக்கி தொ.மு.சி. ரகுநாதன் தம் கருத்தாக்கங்களைத் தருகிறார். இந்நூல் 1984-ல் வெளியான சிலப்பதிகாரம் பற்றிய சமூகவியல் ஆய்வு நூல்.

தந்தி விடு தூது, பணம் விடு தூது,



டம்பாச்சாரி விலாசம், காந்திமதி அந்தாதி, பஞ்சலட்சணம் ஆகிய ஐந்து நூல்களை 'சமுதாய இலக்கியம்' எனும் தொ.மு. சி.யின் நூல் அறிமுகப்படுத்தியது. நாடகக் குழுவை நடத்திவரும் ஒருவர் பணத்தை இழந்து திண்டாடும் நிலையில் பண உதவி கேட்டு ஊரிலிருந்து தம் மனைவிக்குத் தந்தி அடிக்கிறார். இந்த 'தந்திவிடுதூது' நூலாக விரிவுபெறுகிறது. இதில் நாடகக்குழு நொடித்துப் போன சூழலில் ஆசிரியர்படும் பொருளாதார இன்னல்கள் முழுவதும் விளக்கப்படுகின்றன. தூதுஇலக்கியம் பற்றியும் அதன் வளர்ச்சி பற்றியும் வரலாற்றுப் போக்கில் சொல்லிச் செல்கிறார்.

தொ.மு.சி எழுத்தாளராக மட்டுமின்றி சிறந்த பத்திரிகையாளராகவும் தன் பங்களிப்பைச் செய்துள்ளார். 1940-ல் 'மின்னல்' என்ற ஒரு கையெழுத்துப் பத்திரிகை நடத்தியுள்ளார். கதை, கவிதை எழுதுவார். சென்னை 'தினமணி' பத்திரிகையில் உதவி ஆசிரியராக 1945-46 ஆக இரண்டு ஆண்டுகள் பணியாற்றினார். அங்கிருந்து விலகியதும் 1946-47-களில் 'முல்லை' என்ற இலக்கிய இதழின் ஆசிரியராக உழைத்தார். 'முல்லை' ஒரு நல்ல கவனிக்கத்தக்க சிற்றிதழாக வளர்வதற்கு தொ.மு.சி.யின் திறமையும் உழைப்பும் உதவின.

1954- டிசம்பர் தொ.மு.சி ரகுநாதன் நெல்லையில் தொடங்கிய இலக்கிய மாத இதழின் பெயர் 'சாந்தி'. ரூபாய் மூவாயிரம் முதலீட்டில் இவ்விதழைத் தொடங்கினார். ரகுநாதனின் அண்ணா பாஸ்கரத் தொண்டைமான் தன் மாவட்ட ஆட்சியாளர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றார். அப்போது செய்யப்பட்ட பாகப்பிரிவினை மூலம் ரகுநாதனுக்குக் கிடைத்தது அவருடைய தந்தையின் நூலகமும் ரூபாய் மூவாயிரமும்தான். இதுதான் சாந்திக்கான முதலீடு.

தொ.மு.சி.யின் மொழிபெயர்ப்பு அனுபவமே 'சோவியத் நாடு' அலுவலகத்தில் வேலைப் பார்க்கலாம் என்ற எண்ணத்தை அவருள் ஏற்படுத்தியது. ரஷ்யப் படைப்புகள் பலவற்றை மொழிபெயர்த்தார். ஓரளவுக்குப் பணம் கிடைத்தது.

தன் இளமைக்காலத்தில் தொ.மு.சி ரகுநாதன் நாடகங்கள் பல எழுதியுள்ளார். மருது பாண்டியர், சிலை பேசிற்று, பஞ்சப்பாட்டு போன்ற நாடகங்கள் அச்சுவடிவில் வெளிவந்தன. அவருடைய 'பஞ்சும் பசியும்' நாவலை கைத்தறி நெசவாளர்கள் நடிப்பதற்கென்று நாடகவடிவில் எழுதிக் கொடுத்துள்ளார். அவருடைய 'காவியப்பரிசு'-ம் வள்ளுவர் கலாமன்றத்தினரால் நாடகமாக்கப்பட்டுள்ளது. ரகுநாதனே அதில் நடித்துள்ளார். அவர் 'பிரஸ்' என்ற சோவியத் நாடகம் ஒன்றையும் மொழிபெயர்த்துள்ளார். 'நெல்லை சதி' வழக்கையொட்டி வ.உ.சி பற்றிய நாடகம் ஒன்றும் எழுதியுள்ளார்.

அவருடைய நாடகங்களில் மிகச் சிறந்ததாக மதிக்கப்படுவது. 'மருது பாண்டியர்கள்'. ரேடியோ நாடகமாக எழுதப்பட்டது. 27 காட்சிகளை உடையது. கதைக் கட்டமைப்பிலும் ஒலிநாடக நுட்பத்திலும் உத்திகளிலும் பாத்திரப் படைப்பிலும் கருத்திலும் இந்நாடகத்தின் தரம் உயர்ந்தது. எண்சுவைகளும் விரவி நிகழ்வுகளுக்கும் பாத்திரங்களுக்கும் உணர்ச்சியும் எழுச்சியும் ஊட்டுகின்றன. எழுத்தாளர் வரலாற்றுக்குள் செல்வது அது கலையாக வடிப்பதற்கு மட்டுமன்று, நிகழ்காலத்துக்கான ஒரு உந்துதலைக் கொடுக்கவே அதைச் சாதித்துள்ளார். ரகுநாதன்.

தொ.மு.சி நன்றாகப் படம் வரைவார். அவர்கள் குடும்பத்தில் எல்லோருக்கும் கையெழுத்து நன்றாக இருக்கும். இவருடைய தந்தையார் சிறுவயதில் அடித்து எல்லோரையும் காப்பி நோட்டு எழுத வைப்பார். படிக்கும் போதும் எழுதும் போதும் இடப்பக்கமிருந்துதான் வெளிச்சம் வரவேண்டுமென்பார். பென்சிலை ஒழுங்காகச் சீவிக் கூர்மையாக வைத்திருக்க வற்புறுத்துவார். பேப்பரைப் பிசிறு இல்லாமல் நேராக மடித்துக் கிழிக்க வேண்டும் என்பார் எழுதும்போதும் சுட்டுவிரல் மடங்கக் கூடாது என்பார். பேனா பென்சிலை எப்படிப் பிடிக்க வேண்டும் என்றெல்லாம் கற்றுக் கொடுத்துள்ளார். ஒவ்வொன்றிலும் அழகுணர்ச்சி மிளிர கவனமாயிருப்பார். இந்த ஒழுங்குகளை எல்லாம், தான் கடைசிவரை கடைப்பிடித்ததாக தொ.மு.சி. தன் பேட்டியின் போது பொன்னீலனிடம் கூறியுள்ளார்.

தொ.மு.சி எழுதிய நூல்களுள் ஒரு

எழுத்தாளன் வாழ்க்கை வரலாற்றை எடுத்துக் கூறும் நூல் புதுமைப்பித்தன் வரலாறு. நியூ செஞ்சுரி புத்தக நிறுவனத்தார் 1951-இல் முதல் பதிப்பை வெளியிட்டுள்ளனர்.

'சோவியத்நாடு' பணியிலிருந்து விலகிய ரகுநாதன் நெல்லை வந்து, பெருமாள்புரம் பிள்ளையார் கோவில் எதிரே ஒரு வாடகை வீட்டில் மனைவி ரஞ்சிதம் அம்மையாருடன் குடியேறினார். இலக்கிய வரலாறுகள், இலக்கியக் கோட்பாடுகள் குறித்த நூல்களைப் படித்தார். அவரைத் தங்கள் இதழ்களுக்கு எழுதும்படி பரிசுகள் கொடுப்பதாகவும் சிலர் முன்வந்து அழைத்தனர். தன் சமூகப் பார்வை முனை மழுங்கிவிடக் கூடாது என்ற கரிசனத்தில் அவ்வழைப்புகளை மறுத்தார். இந்நிலையில் செப்டம்பர் 29, *1990*-இல் நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம், 'முற்போக்குக் கலை இலக்கிய இயக்கங்கள் *50* ஆண்டுகள்' என்னும் தலைப்பில் இருநாள் கருத்தரங்கம் நடத்தியது. நெல்லை சகுந்தலா இண்டர்நேஷனல் மண்டபத்தில் ரகுநாதன் கலந்து கொண்டு உரையாற்றினார். 'சோசலிச எதார்த்தவாதம் என்னும் சொல்லாக்கம் ஒரு அரசியல் திணிப்பு' என்ற கருத்தை இந்த மேடையில் முன்வைத்தார்.

*1967*-க்கு முன் தொ.மு.சி சுதந்திர எழுத்தாளராக விளங்கினார். தொ.மு.சி.யின் பெரும்பாலான மொழி பெயர்ப்புகள் சமூகவாழ்வை மையமாகக் கொண்டு படைக்கப்பட்ட ரஷ்யப் பேரிலக்கியங்களே, அலக்சி டால்ஸ்டாயின் அக்னிப் பரீச்சை, இலியா ஏரன்பர்கின் வசந்தமே வருக, மைக்கல் ஷோலக்கோவின் இதயத்தின் கட்டளை, மார்க்சிம் கார்க்கியின் தாய், ஆர்.எல். ஸ்டிவன்சனின் நாவல் நான் இருவர், பிரம்மச்சாரியின் டைரி முதலிய படைப்புகள், மாயாகாவிஸ்கியின் லெனின் கவிதாஞ்சலி, மார்க்ஸ் ஏங்கல்ஸ் எழுதிய மதத்தைப் பற்றிய கட்டுரைகள் என முக்கியமான உலகப் படைப்புகள் பலவற்றை மொழிபெயர்த்துள்ளார். சில நூல்களை இரண்டுமுறை கூட மொழிபெயர்த்துள்ளார்.

தொ.மு.சி நான்கு கவிதைத் தொகுதிகளும் எழுதியுள்ளார். 'திருச்சிற்றம்பலக் கவிராயர்' என்ற புனைபெயரில் கவிதைகள் எழுதுவார். "தொ. மு.சி.யிடம் கலைஉணர்வும், கவிதைப்பற்றும் முளைவிடத் தந்தையார் தொண்டைமான் முத்தையாவே அடிப்படைக் காரணமாக இருந்திருக்கிறார்" என்று தி.க.சி. பேட்டி கண்டு எழுதியுள்ளார். அவருடைய தந்தையார் முத்தையா, மகன் சிதம்பரரகுநாதனுக்குச் சிறுவயதிலேயே பாரதியார் பாடல் நூல்களைக் காசுகொடுத்து வாங்கி மகன் கையில் கொடுத்து மனனம் செய்யும்படிச் சொல்வார். சூழலாலும் பாரம்பரியத்தாலும் பிறவிக் கவிஞராக விளங்குவதற்கு ரகுநாதனுக்கு வாய்ப்பு ஏற்பட்டது. மார்க்சியக் கண்ணோட்டத்துடன் கவிதை எழுதிப் புகழ்பெற்றார்.

இவருடைய கவிதைத் தொகுப்புகள்.

ரகுநாதன் கவிதைகள் (1957)

கவியரங்கக் கவிதைகள் (1963)

காவியப் பரிசு (1981)

தமிழால் ஏலாதா? (1987)

'நான் நாற்பதாம் ஆண்டுகளின் தொடக்கத்தில் தமிழ் இலக்கிய உலகில் ஒரு கலகக் கவியாகவும், அங்கதக்கவிஞனாகவும் அடியெடுத்து வைத்த காலத்தில் எழுதிய 'ரிஷிமூலம்', 'ஆசை பலியாச்சே?' போன்ற கவிதைகள் தொட்டு எழுபதாம் ஆண்டுகளின் இறுதிவாக்கில் எழுதிய 'திரும்பவும் திரும்பவும் பிறப்பேன்' கவிதை ஈறாக, சென்ற ஒரு தலைமுறைக் காலத்தில் நான் எப்போதெப்போதோ எழுதிய சிறிதும் பெரிதுமான சில கவிதைகள் அடங்கியுள்ளன' என்று எழுதியுள்ள தொ.மு.சி.யின் (காவியப் பரிசு நூலின்) முன்னுரையைக் கொண்டு அவர் கவிதை எழுதிய காலவரை நமக்குப் புலனாகிறது.

கவிதைகளில் தொ.மு.சி. வெளிப்படுத்தும் எண்ணங்கள் முற்போக்கானவை சமுதாயப் பொறுப்பு மிக்கவையாகக் காணப்படுகின்றன. சமுதாயத்தில் மண்டிக்கிடந்த மூட நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், அறியாமை போன்றவற்றைப் போக்கி ஒரு நல்ல சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்ற முற்போக்கு நோக்கம் கொண்டவை. சாதி ஒழிப்பு, தேசிய மறுமலர்ச்சி, தமிழ் முழக்கம் போன்றவற்றில் கவிஞரின் சீரிய எண்ணங்கள் பளிச்சிடுவதைக் காணலாம். நாட்டுப்பற்றும், மொழிப்பற்றும் இவருடைய கவிதைகளில் மிளிர்வதை அவருடைய 'தமிழால் ஏலாதா?' கவிதைத் தொகுதி பறைசாற்றும். வசனகவிதை முயற்சிக்குத் தொ.மு.சி தன் எதிர்ப்பைத் தெரிவித்தார்.

பாரதி வழிநின்று தொ.மு.சி.யும் கவிதைகள் படைத்து வழங்கினார். வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவமாகி நிற்கும் மெய்ப் பொருளையும் கவிதையில் தொட முயன்றார். கவிதையின் மூலமாக இயற்கையின் அழகையும் மனித வாழ்க்கையின் ஆயிரமாயிரம் அலைகளையும் இவ்விரண்டின் ஊடேயும் இவற்றைக் கடந்தும் நிற்கின்ற சத்தியத்தையும் பாரதியார் காட்டி நின்றார். இதுபோலவே, தொ.மு.சி. ரகுநாதனும் தம் கவிதானுபவம் மூலமாக இயற்கை மட்டன்றி மனிதவாழ்வின் விடியலைப்பாடி நின்றார். இருவருக்கும் கவிதை என்பது வெறும் தொழிலாக மட்டுமல்லாமல் வாழ்வாகவே ஆயிற்று. சாதனமாக இல்லாமல் சாதனையாக ஆயிற்று. தம்முடைய கற்பனை வளத்தால் உணர்ச்சி ஆற்றலால் வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் அனுபவங்களாக மாற்றி நமக்கு இருவரும் அளிக்கத் தவறவில்லை. தம் கற்பனையும் உணர்ச்சியும் போன வழியிலேயே அவற்றின் மூலமாக வேறொன்றையும் தொடமுற்படாமல் அவற்றையே பொருளாகக் கொண்டு தம்மை மறந்தநிலையில் தோய முடியும் என்பதை நிரூபிக்கத் தங்கள் கவிதைகளைப் பயன்படுத்தினர். தொ.மு.சியின் கவிதைகளில் வட்டார வழக்குச்சொற்கள் நடப்பியல் தன்மையில் அமைந்துள்ளன. ●

## மவுனங்கள்...?

*அருகில் அமர்ந்திருப்போர்*
*கேலியாய்ச் சிரிப்பரோ?...*
*ஆசிரியரின் கேள்விகளுக்கு*
*பதிலளிக்காத மவுனம்!*

*கருப்போ விருப்பின்மையோ*
*எப்படிவந்து நின்றாலென்ன?...*
*காத்திருந்த காலங்களால்*
*தலைகவிழ்ந்த மவுனம்!*

*நேரங்கள் எதிராகும்போது*
*நியாயங்கள் நிலைக்குமா?...*
*நீதியின் கேள்விகளுக்கு*
*கைகட்டிய மவுனம்!*

*வெளியேற போராடும்உணவு*
*வயிற்றுக்குள் இறங்குமோ?...*

*மனைவியின் முகம்பார்த்து*
*பேசமறுக்கும் மவுனம்!*

*தவறுகள் அறிந்தும்*
*தட்டிக்கேட்டால் தடைவருமோ?*
*உறவுகளின் பிணைப்பில்*
*உறங்குகின்ற மவுனம்!...*

*கடந்து செல்லும்*
*வாழ்க்கைப் பயணங்களில்*
*இந்த மவுனங்கள்*
*நம்மைக் காப்பாற்றுகின்றனவா?*
*காலை வாருகின்றனவா?*
*முன்னெழுந்தக் கேள்விகளுக்கு*
*வந்து நிற்பவையும்*
*அந்த மவுனங்கள்தான்!*

**–பாப்பாக்குடி இரா.செல்வமணி**



# ஆழ்ந்த இரங்கல்



**1942–2018**

'காணிநிலம்' ஆசிரியர் குழுவில் ஒருவரான தாணப்பன் அவர்களின் தந்தையார் திரு.ப.பரதேசியாபிள்ளை என்ற மயில் அவர்கள் உடல்நலக் குறைவால் 11–06–2018 அன்று நெல்லையில் காலமானார்கள். அவரை இழந்து வாடும் அவரது குடும்பத்தினருக்கு 'காணிநிலம்' ஆசிரியர் குழுவின் ஆழ்ந்த இரங்கல்.

இரா.நாறும்பூநாதன்



# ஜோதி விநாயகம் என்றொருவர்...

மாரியப்ப பிள்ளை வடைக்கடை முன்பு தான் ஜோதி விநாயகத்தை முதன்முதலில் சந்தித்தேன். அவரது கம்பீரமான உயரம் முதலில் பிரமிக்க வைத்தது. அவரது கனத்த கண்ணாடியை அவர் அடிக்கடி எடுத்து துடைத்தபடி பேசியவிதம் பிடித்துப்போனது. அவரோடு விவாதம் பண்ணியது தோழர் தேவபிரகாசும், பால்வண்ணனும்.

கோவில்பட்டியில் அப்படித்தான். படித்த ரெண்டு பேர் சந்தித்தால் விவாதம் தான். அதிலும் சர்வதேச அரசியல் பேசும் ரெண்டு பேர் சந்தித்தால் கேட்கவே வேண்டாம். நான் பெரும்பாலும், ஜோதியின் மேனரிசத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தேன். எதிராளி பேசும்போது அவர் குறுக்கிடுவதே இல்லை. தலையைத் தலையை ஆட்டிக்கொண்டு கேட்க மட்டும் செய்கிறார். அவர் பேசி முடித்தபிறகு, தனது கண்ணாடியைக் கழட்டி தனது சட்டையில் துடைத்து பின் மாட்டியபடி, பேச ஆரம்பிக்கிறார்.

அவரது வாதம் செய்யும் முறை பிரமிக்க வைக்கிறது. ஆறடிக்கும் மேலே உருவம் கொண்ட அவர், ஒவ்வொரு கேள்விக்கும் நிதானமாக பதில் சொல்கிறார். கைகளை ஆட்டி ஆட்டி, கண்களை உருட்டி, உடல்மொழியோடு பேசுகிறார். கம்யூனிசம் அவருக்கு அவ்வளவாக பிடித்ததில்லை. எதிர்வாதம் செய்கிறார். தனது வாதங்களை பொறுமையுடன் முன்வைக்கிறார். உலக இலக்கியங்கள் பலவற்றை படித்த ஞானம் அவர் பேச்சில் வெளிப்படுகிறது.

ஒரு குறிப்பிட்ட நாளில், அவரை விளாத்திகுளத்தில் நான், உதயசங்கர்,கோணங்கி, அப்பணசாமி, சாரதி, முத்துச்சாமி, திடவை பொன்னுச்சாமி ஆகியோர் சந்திக்கிறோம். வைப்பாறு என்றொரு ஆறு உண்டு அங்கே. மணல் நிறைந்த வைப்பாற்றில், ஒரு இரவு முழுவதும் ஜோதி விநாயகத்துடன் பேசிக்கொண்டிருந்தோம்.

ரஷ்ய எழுத்தாளர் தாஸ்தாவ்ஸ்கி முதல் கார்க்கி வரை எங்களோடு வைப்பாறு மணலில் இருந்தார்கள். அவருக்கு சோவியத் இலக்கியங்கள் யாவும் அத்துபடி.

விடிய விடிய பேசியபடி ஆற்றங்கரையிலேயே படுத்து விட்டோம்.

அவர் விளாத்திகுளம் மார்க்கெட்டிங் சொசைட்டி யில் பணிபுரிந்து கொண்டிருந்தார்.

நாங்கள் "மொட்டுக்கள்" என்றொரு கையெழுத்து பத்திரிக்கை நடத்திக்கொண்டிருந்தோம். நாங்கள் என்பது நான், உதயசங்கர், சாரதி, முத்துச்சாமி ஆகிய நண்பர்கள். ஜோதி விநாயகத்தோடு ஒப்பிட்டால், நாங்கள் மிக மிக இளையவர்கள். ஆனால், அவர் எங்கள் பத்திரிக்கைக்கு "ஆலமரத்தோப்பும் தோப்பாகா காளான்களும்" என்றொரு கட்டுரை எழுதிக்கொடுத்தார். மிகச் சிறந்த கட்டுரை அது.

இடதுசாரி எழுத்தாளர்களின் கட்டுரைகள், கதைகளை மட்டுமே படித்து கொண்டிருந்த எங்களுக்கு, இவைகளையும் படியுங்கள் என்று சொன்னவர் எழுத்தாளர் ஜோதி விநாயகம். எதையும் ஒதுக்காதீர்கள். எல்லாவற்றையும் படியுங்கள். எது சரி, எது தேவையற்றது என்பதை காலம் உங்களுக்கு உணர்த்தும் என்று சொல்லி எல்லாவற்றையும் படிக்கச் சொன்னவர் ஜோதி விநாயகம்.

எங்களின் பேச்சை காது கொடுத்து கேட்பார் அவர். எங்களின் கதை, கவிதை, கட்டுரைகளை மனம் திறந்து பாராட்டுவார். தவறைச் சுட்டிக்காட்டுவார். யோசித்து யோசித்து பார்க்கும்போது, அவரிடம் கற்றுக் கொண்டது எது என்று பார்க்கும்போது, எதிராளி பேசி முடிக்கும் வரை பொறுமையோடு அவர் பேசுவதை கேட்க வேண்டும். பேசி முடித்தபிறகே நமது கருத்தை முன்வைக்க வேண்டும் என்பதே.

என்ன சண்டை போட்டாலும், மறுமுறை சந்திக்கும்போது, "தோழர்...நல்லா இருக்கீங்களா.." என்றே தனது பேச்சைத் துவங்குவார்.

அவரது ஊர் திம்மராஜபுரம் என்பதும், பாளையங்கோட்டை பேரா.சிவசு, ஏ.ஏ.ஹெச்.கே.கோரி போன்ற எழுத்தாளர்கள் அவரது நெருங்கிய நண்பர்கள் என்பதும் பின்னால் அறிந்தவை.

ஒருமுறை பேசிக்கொண்டிருக்கும்போது, தனக்கு திருமணம் என்ற செய்தியை தெரிவித்தார். நாங்கள் உற்சாகம் அடைந்தோம். என்னிடம் தனியே பேசும்போது, திருமண செலவு நிறைய ஆகும் போல. எனக்கு யாரிடமாவது மூவாயிரம் கடன் வாங்கித் தருவீர்களா என்று சொன்னபோது, அவர் முகத்தில் ஏற்பட்ட மாற்றங்கள் குறித்து பெரிதும் கவலை பட்டேன்.

சம்பவம் நடந்தது 1986 இல் என நினைக்கிறேன். அப்போது அவர் மிக சாதாரண மனிதர் போல நடந்து கொண்டது எங்களுக்கு கவலை அளித்தது. அப்போது அரசுப்பணியில் இருந்தது நான் மட்டுமே.

நான் அவரது கைகளை பிடித்துக்கொண்டேன்.

"ஜோதி. நீங்கள் இப்படி பேசாதீங்க.." என்று மட்டுமே பேச முடிந்தது. அவரது திருமணம் பாளையங்கோட்டை திரௌபதி அம்மன் கோவிலில் வைத்து நடைபெற்றது. நெருங்கிய உறவினர்கள், நண்பர்கள் மட்டுமே இருந்தோம். அதிகாலை ஏழு மணிக்கு அவர் கேட்ட தொகையை ஒரு கவரில் வைத்து யாருக்கும் தெரியாமல் அவர் கையில் கொடுத்தேன்.

"நன்றி நாறும்பூ..." என்று கண்கள் கலங்க எனது கைகளைப் பிடித்துக்கொண்டார். எவ்வளவு பெரிய ஆளுமை இவர். கேவலம் மூவாயிரம் ரூபாய் பணம் இவரை இப்படி கீழ் நிலைக்கு கொண்டு வந்து விட்டதே என்று தோணியது.

கோவில்பட்டி காந்தி மைதானத்தில், பின்னிரவு நேரங்களில், எங்களுக்கு பேரா.நா.வானமாமலை, ஜீவா, தொ.மு.சி.ரகுநாதன், சாத்தான்குளம் ராகவன் எனப் பலரையும் அறிமுகம் செய்வித்தவர் ஜோதி விநாயகம்.

திருமணம் முடிந்தபிறகு, நெல்லைவாசியாக ஆன ஜோதி விநாயகம் அவர்களை நான் அடிக்கடி சந்திப்பேன். நானும் நெல்லைவாசியாக மாறிவிட்டேன் அல்லவா?

1990 என்று நினைவு. பாளையங்கோட்டை ஆக்ஸ்போர்டு துவக்கப்பள்ளியில் ஒரு இலக்கிய கூட்டம் முடிந்தபிறகு, நானும், ஜோதி விநாயகமும் பாளை சந்தை அருகே உள்ளே மைதானத்தில் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தோம். சோவியத் நாடு நொறுங்கிப் போயிருந்த நேரம்.

கம்யூனிசத்திற்கு எதிராக அதுவரை பேசி கொண்டிருந்த ஜோதி விநாயகம் அன்று இரவு சோவியத் நாடு சிதறி போனதற்காக கண்ணீர் விட்டு அழுதார்.

ஜோதி விநாயகத்திற்கு ஒரு பையன். அவன் மீது ரொம்ப பிரியம் அவருக்கு. அவனுக்கு விளையாட்டு சாமான்கள் நிறைய வாங்கித் தருவார். பஸ், ரயில் என பல சாமான்கள்... ஒருமுறை, நான் சென்னை போகும்போது, ரிமோட் கண்ட்ரோல் பஸ் கிடைச்சா வாங்கி வாங்க, பையன் கேட்கிறான் என்று சொன்னார்.

பாளையங்கோட்டையில் உள்ள 'இலக்கியத் தேடல்' என்றொரு அமைப்பு சிறந்த கையெழுத்து பத்திரிக்கை ஒன்றை தேர்வு செய்யும். அதற்கு உங்களின் 'மொட்டுக்கள்' கையெழுத்து பத்திரிக்கையை அனுப்புங்கள் என்று சொன்னார். எங்களின் பத்திரிக்கை தேர்வானது. உதயசங்கர் போய் அந்த விருதை வாங்கி வந்தான்.

பிறகு, அவரது தொடர்பு சட்டென்று விடுபட்டு போனது. திடீரென்று ஒருநாள், ஜோதி விநாயகத்திற்கு உடல்நிலை சரியில்லை என்று செய்தி வந்தது. திம்மராஜபுரம் சென்று பார்த்தோம் நானும், உதய்சங்கரும்.

கட்டிலில் அமைதியாய் படுத்துக் கிடந்தார் அவர். பேச இயலவில்லை. கைகளால் சைகையில் பேசினார். தனது கணீரென்ற குரலால் எதிராளியை பணிய வைக்கும் ஜோதி விநாயகம் பேச முடியாமல், கட்டிலில் சைகையில் பேசியதை எங்களால் சகித்து கொள்ள இயலவில்லை.

அவர் மனைவி அமைதியாய் சொன்னார் "அவருக்கு கேன்சர்"

கட்டிலின் வெளிப்புறம் வரை அவரது கால்கள் நீண்டிருந்தன. ஒரே பையன் ஜீப் வைத்து விளையாடி கொண்டிருந்தான்.

மறுநாள் அவர் இறந்து போனதை தினமலர் பேப்பரில் அஞ்சலி விளம்பரத்தில் தெரிந்து கொண்டபோது, மனம் இருண்டது.

தமிழ் இலக்கிய உலகில், அறிந்து கொள்ளப்பட வேண்டிய படைப்பாளியாக இருந்த ஜோதி விநாயகம் மிக குறுகிய காலத்தில் இறந்து போனார்.

"ஒரு கட்டுரை எப்படி எழுத வேண்டும் என்பதை பேரா.நா.வானமாமலை அவர்களின் ஆராய்ச்சி கட்டுரை மூலம் தெரிந்து கொள்ளுங்கள்.

எதிராளியின் பேச்சை முற்றிலும் கவனித்து, அதன்பிறகு பதில் கூறுங்கள்.

எழுத்தாளனுக்கு தேவை மனிதாபிமானம்" என்று சொன்ன எங்கள் அன்பு நண்பர் ஜோதி விநாயகம் ஒரு மாலை நேரத்தில் மரித்துப்போனார்.

அவரது புகைப்படம் கூட இல்லை என்பது எவ்வளவு சோகம் என்பதை உணர முடிகிறது. •

# சுண்டல்...

## சுப்ரா

**வா**சகனாகவே இருந்து விட முடிவது ஒரு வரம், சுகம். அதை மீறி வாசிக்கையில் எழுத வேண்டும் என்ற பொறி உருவாகி விட்டால் ஒரு கட்டத்திற்கு மேல் அதை உள்ளுக்குள்ளேயே அடை காப்பதென்பது மிக மிக சிரமம். சமயங்களில் படைப்பாளியின் படைப்புகள் அவர்களுக்காவே படைக்கப் படுகிறது. ஒரு கட்டத்தில் பகிர்ந்து கொள்ள வேண்டியது அவசியமாகி விடுகிறது. உள்ளுக்குள்ளேயே உள்ள பொறி நெருப்பாகி விடுகிறது. 56 வருடங்கள் வாழ்ந்த எமிலி டிக்கின்ஸனின் கவிதைகள் அவர் இறந்து நான்கு வருடங்கள் கழித்தே முதன் முதலாக பிரசுரிக்கப் பட்டன. ஆயினும் அவர் வாழும் வரை எழுதிக் கொண்டேதான் இருந்திருக்கிறார் அவர் மட்டுமே வாசித்துக் கொண்டு. எனினும் இன்றும் படிப்பவரிடம் பாதிப்புகளை ஏற்படுத்திக் கொண்டுதான் இருக்கின்றன அவரது கவிதைகள்.

இந்த இடத்தில் காஃப்காவின் ஒரு மேற்கோள் குறித்து என் எண்ணங்களைப் பகிர்ந்து கொள்ளலாம் என்று நினைக்கின்றேன்.

“A non–writing writer is a monster courting insanity” Franz Kafka. காஃப்காவின் வரிகளுக்கு என் மனதில் படும் பொருள் இப்படித்தான் உள்ளது. எழுத்து ஆர்வம் என்பது மனதிற்குள் எப்போதுமே எரிந்து கொண்டிருக்கும் நெருப்பு போன்றது. எல்லோர் மனதிலுமே எண்ணங்கள் எழுவது இயல்பானதுதான். ஆனால் அதைப் பிறரோடு பகிர்ந்து கொள்ள நினைப்பவனே எழுத ஆரம்பிக்கிறான். [எழுத்தை வியாபாரமாக்குபவர்கள் விதிவிலக்கு காஃப்கா அத்தகையவர் அல்ல.] எந்த எழுத்தாளனுக்குமே ஏதோ ஒரு தருணத்தில் மனதில் உள்ளவற்றை எழுத்தில் கொண்டுவர முடியாத சூழ்நிலை உருவாகும். காஃப்காவுக்கும் அந்த தருணம் ஏற்பட்டதுண்டு. அத்தகைய ஒரு சூழ்நிலையில் அவரிடம் இருந்து வெளிப்பட்ட வரிகள்தான் இது. எழுத வேண்டும் என்ற நெருப்பு எரிந்து கொண்டிருக்கும் போது, எழுத இயலாத நிலையில் உள்ளவனின் மனதில் உருவாகும் கொந்தளிப்பை எழுத்தாளன் மட்டுமே உணர முடியும். அந்த கொந்தளிப்பை உணர்த்தும் வரிகளே அவை.

எனவேதான் அந்தப் பொறி உருவானவர்கள் எழுதிக்கொண்டே இருக்கிறார்கள், எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல். அவர்களால் எழுதாமல் இருக்க இயலாது என்பது என் எண்ணம். தமிழ் இலக்கியச் சூழலில் வாழும் போது உணரப் படாதவர்களாக மௌனி, ஆத்மாநாம்... ஏன் பாரதியைக் கூடச் சேர்த்துக் கொள்ளலாம். யோசித்தால் இன்னும் பல பெயர்கள் கிடைக்கக்கூடும்.

**ரா**.பி.சேதுப்பிள்ளை 1896ல் பிறந்து அண்ணாமலை பல்கலைக்கழகம், சென்னை பல்கலைக்கழகம் ஆகியவற்றில் தமிழ் விரிவுரையாளராகவும், பேராசியராகவும் பணியாற்றியவர். சிறந்த மேடைப் பேச்சாளர். 30 க்கும் மேற்பட்ட தமிழ் நூல்களை எழுதியுள்ளார். “தமிழின்பம்” நூலுக்காக சாகித்ய அகாடமி விருது பெற்றவர். செய்யுளுக்கு என்றே கருதப்பட்ட அடுக்குமொழி, எதுகை, மோனை என்ற அனைத்தையும் உரைநடையிலும் கொண்டு வந்தவர். சொல்லின் செல்வர் என்று புகழப்பட்டார். 1961 ல் மறைந்தார்.

இவர் அந்தக் காலத்திலேயே தன் நண்பர்கள், உறவினர் திருமணங்களின் போது தமிழ் நூல்களை பரிசாக வழங்கியுள்ளார். 1943 ல் அவர் அவ்வாறு வழங்கிய ஒரு நூல் ஆத்திசூடி முதலிய பத்து நீதிநூல்களின் தமிழ் மூலம் மற்றும் ஆங்கில மொழிபெயர்ப்பு அடங்கிய ‘நீதிநூல்கள் பத்து’ என்ற புத்தகம். “இறை திருவருளால் நிறைநலம் பெறுகென வாழ்த்துரை கூறி வழங்குமென் பரிசில்.” என்று அச்சிடப்பட்டு அவர் கையொப்பம் இட்டுள்ளார். [13.6.1943] இதைப் பின்பற்றினால் நல்ல நூல்கள் விற்பனை ஆவதில்லை என்ற குறை தீருமே. என்ன... நீதிநூல்களோடு நிறுத்தி விடாமல் புனைவுகளுக்கும் இடம் கொடுக்கலாம்.

**ஒ**ரு மாறுதலுக்கு இந்த இடத்தில் [வழக்கமாக வாசித்ததில் பிடித்தது] சொந்தச் சரக்குகள் இரண்டு...

*விற்காத பலூன்களில்*
*நிரம்பியிருக்கிறது*
*விற்பவனின் பெருமூச்சு.*

◆◆◆

*இனி ஒரு விதி செய்வோம்*
*வழக்கம் போல்*
*அதையும் மீறுவோம்.*

●



காணிநிலம் ஆசிரியர் குழுவைச் சார்ந்த ரமணிமுருகேஷ் அவர்கள் எடுத்த நிழற்படத்திற்கு பொருத்தமான கவிதைகள் கேட்ட முகநூல் பதிவில் பின்னூட்டங்களாக இட்டப்பட்ட கவிதைகளில் சில...

ஆறறிவில் தொலைந்துபோன
அன்பெனும் அமிழ்தை
ஐந்தறிவு அள்ளியுணர்த்துது அகிலத்திற்கு
அலைபாயும் மானிடப்பதர்களே
அன்பெனும் கோதலின் அருமை இனியாவது
உணர்வீரோ உலகுய்ய...

– தமிழ்த்தென்றல்

ஆதாம்-ஏவாள் - அனலாய் காதல் !

– சுகர் ஜெயபாலன்

சற்றுமுன் சுற்றுலாப்பயணி
வீசிச்சென்ற நெகிழிப்பையை
உதறிப்பார்த்து உள்ளிருந்த
உணவை உண்டபின்
குப்பைத் தொட்டியிலிட்ட
நண்பனை கட்டித்தழுவி
பாராட்டுகிறது இக் கானகம்
காப்பாற்றிடக் கவலைப்படும் மந்தி.....

– எஸ்.வீ.ராஜன்

அந்தரங்கங்கள் / அந்தரங்கமற்று
அரங்கேற்றம் / ஆகிறது
ஆதி மனிதனிடம்

– சித்ரா மாணிக்கம்.

ஒரு மீட்டெடுத்தலின்
அளப்பறிய ஆனந்தத்தின் தொடக்க
அத்தாட்சியாய் இருக்கலாம்...

ஒரு இறுதிமுடிவுக்குப் பின்னான
இயலாமை கழிவிரக்கத்தில்
விடைகொடுத்தலும்
விடைபெறலுக்குமான
முற்றுப்புள்ளியாகவும்
இருக்கலாம்....

பரிமானமாற்றத்தில்
பகடைக்காயாய் உருளும்
மனிதர்களுக்கான முன்னோடியாய்
மாறிப்போனக்கொடுமையில்...

வார்த்தைகளை கற்றுக்கொண்டு
வஞ்சனை செய்யாதுபோனோமே என
உணர்வுகளில் உணர்த்திக்கொண்டிருக்கலாம்
அவமானங்களைக் களைக்கமுயலும்
ஆறுதலும் தேறுதலுமாய்
அவர்களுக்கான ‘மொழியில்’.

– சாயா சுந்தரம் .

இதழோடு இதழ் இணை சேரும் அதில்
இதமான அன்பது பரிமாறும்!
பதமான பண்பாடு மிளிரும் அதைப்
பார்ப்பவர் நெஞ்சம் நெகிழ்ந்தொழுகும்!
தேன்சிந்தும் புணர்ச்சியில் புரளும் - அம்
மந்தியின் மனமங்கே மகிழும்
குரங்கினிற் கைபற்றும் சிலவும்
மென்மையில் மிதக்கவும் கூடும்!

– வெ சு பாலநேத்திரம்

இங்கே....
தயக்கங்களும் இல்லை / வெட்கங்களும் இல்லை
உண்மை அன்பின்
அழகிய காதலின் / ஆனந்த வெளிப்பாடு
இதழோடு இதழ் பதித்த
இந்த தழுவிய முத்தம்...

– ஈஸ்வரி

இதழ் வடிவமைப்பு: டிலைன்ஷாப், 76677 55673.

# ‘தூங்கா விழிகள்’ நூல் வெளியீடு!

‘காணிநிலம்’ ஆசிரியர் குழுவில் ஒருவரும் சுத்தமல்லி அரசு மேல்நிலைப்பள்ளி கணித ஆசிரியருமான கவிஞர் பாப்பாக்குடி இரா. செல்வமணியின் ‘தூங்கா விழிகள்’ நூல் வெளியீட்டு விழா பாளையங்கோட்டையில் 24.6.2018 அன்று சிறப்பாக நடைபெற்றது.

கவிஞர் குமாரசுப்பிரமணியம் தலைமையில் நூலினை முனைவர் கடவூர் மணிமாறன் வெளியிட, தலைமை ஆசிரியர் த.மோசஸ் பெற்றுக் கொண்டார். மேலும் ‘பூமேடை’ எனும் விமர்சன தொகுப்பு நூலினை ‘பாவையர் மலர்’ ஆசிரியர் திருமதி வான்மதி அவர்கள் வெளியிட, கவிஞர் பே.இராஜேந்திரன் பெற்றுக் கொண்டார். பேராசிரியர்கள் சிவசு, வளன்அரசு, எழுத்தாளர்கள் முத்தாலங்குறிச்சி காமராசு, சுப்ரா, கவிஞர்கள் கணபதி சுப்பிரமணியம், பாப்பனம்பட்டு முருகன், முரசொலி முருகன், உக்கிரன்கோட்டை மணி உள்ளிட்டோர் வாழ்த்தி பேசினர்.

எழுத்தாளர் எம்.எம்.தீன் நூலினை திறனாய்வு செய்தார். கவிஞர் சக்திவேலாயுதம் வரவேற்க, கவிஞர் பிரபு தொகுத்து வழங்கினார். புன்னைச்செழியன் நன்றி கூறினார். நிகழ்வில் தமிழ் அறிஞர்கள், பேராசிரியர்கள், ஆசிரியர்கள், தமிழ் ஆர்வலர்கள், மாணவ, மாணவியர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தனர். ●



‘தூங்கா விழிகள்’ கவிதை நூல் வெளியீடு



‘பூமேடை’ தொகுப்பு நூல் வெளியீடு



‘காணிநிலம்’ ஆசிரியர் குழுவினரின் வாழ்த்து



முகநூல் நண்பர்களின் வாழ்த்து